


உ

சிவமயம்.

# தெய்வத்துதித் திரட்டு.

இஃது

குன்றக்குடி

பென்ஸ் மேஸ்த்திரட்டாகிய

நேட்டிவ் டாக்டர்

ஸ்ரீமான் G. முத்துசாமி பிள்ளை அவர்கள்

குமாரர்

வித்துவான்

வைத்தியம் கணபதியாபிள்ளை அவர்களால்

இயற்றப்பெற்று,

கல்லல்

ஸ்ரீமான் கா. பழ கரு கருப்பணஞ்செட்டியார்

அவர்களால்

திருநெல்வேலி யூநியன் சென்ட்ரல் பிரஸில்

அச்சிலியற்றியன.

1924.

# தெய்வத்துதித் திரட்டு.

இஃது

குன்றக்குடி

பென்ஸ் மேஸ்த்திரட்டாகிய

நேட்டிவ் டாக்டர்

ஸ்ரீமான் G. முத்துசாமி பிள்ளை அவர்கள்

குமாரர்

வித்துவான்

வைத்தியம் கணபதியாபிள்ளை அவர்களால்

இயற்றப்பெற்று,

கல்லல்

ஸ்ரீமான் நா. பழ கரு கருப்பணஞ்செட்டியார்

அவர்களால்

யூநியன் சென்ற்ரல் பிரஸில்

அச்சிலியற்றியன.

1924.

உ

சிவமயம்.

# முகவுரை.

சுவர்க்கநகர்

ஸ்ரீமத் பழ. அ. அழகப்பசுவாமியவர்களால்

இயற்றியன

## அகவற்பா.

மதிதவழ் புரிசை மாசிறு வயனகர்ப்
பதிமிசை வளரும் பான்மும் முடிமுதல்
அருள்பெற் றிலகு மன்னக ரரசன்
உருவினின் மதனு மோம்பு வடிவினன்
சற்குண முடையான் சமரி லரிநிகர்
உற்ற வன்னோர்க் குயிர்ச்சினே கிதனும்
கல்லன்மா நகரோன் கனிதருஞ் சொல்லான்
அல்ல றுலைக்கு மாண்டகை யாளன்
பத்திமிக் குடையான் பாவலர்க் கிணிய
மெத்திக்கும் போற்ற வீந்துளங் களிப்பவன்
மக்களின் மிக்கான் வணிகரிற் றிலகன்
செக்கர் போன்றிலகுந் தேமலார் மார்பன்
செட்டி பழனி யப்பன் றிருச்சேய்
இட்ட கருப்பண செட்டியா மிளவல்
பலதெய் வத்துதிப் பனுவல்க டிரட்டி
நிலமிசை தருக வெனவத் திரட்டினை
முத்தமிழ் தேர்தரு முக்கிரக் கவிஞன்
சத்தி வாராகியின் றண்ணருள் பெற்றவன்
தெச்சணா மூர்த்தியின் பரம்பரைத் திருவான்
எச்சம யத்தவ ரெதிர்ப்பினு மயரான்
முத்துச் சாமியாம் வித்தகன் மைந்தன்
பத்திசேர் கவிஞரின் பக்கலி லிருப்பவன்
கங்கையின் குலத்தோன் கவிபொழி கொண்மூ
பங்கமில் லாதவன் பத்தரின் மிக்கான்

மருவிய வின்னூன் மாத்திர மலாது
இருபதி னுயிரம் பாக்க ளியற்றினன்
குன்றைமா நகரினி னன்று வாழ்பவன்
என்றுந் திருவினி லிறங்காப் பெருமையன்
அன்பர்கள் மகிழ வளித்தன னதனையே
இன்புற வச்சிட் டெலோர்க்குங் கொடுத்தனன்
படித்தவர் கேட்டவர் பகரத் தெரிந்தவர்
மடிமிடி பொடிபட மாண்பொருள் பெருகிடத்
தேவராய்க் கைலை சென்று
ஆவலோ டிருந்துநல் லானந்தம் பெறவே.

## ஷையார் சாற்றுக்கவிகள்.

திருவளர் கமல னிவனென விவன்பாத்
தேவர்க ணரகர்கண் மனிதர்
பருகுளங் களிப்ப வுண்ணுமா வமுதாப்
பகர்தரு கணபதிக் கவிஞோன்
தருநிகர் முத்து சாமியின் செல்வன்
றந்தனன் புலவர்கண் மதிப்பக்
குருவரு டருதெய் வத்துதித் திரட்டைக்
குவலய மதுசிறப் புறவே.

திருப்புகழ் வண்ணம் வெண்பாக் கலித்துறை திருவிருத்தம்
விருப்ப மகவற் பினுமுள பாவின் விதங்களெல்லாம்
மருப்பொலி தேவி வராகி யருளான் வரைந்துவிட்டான்
இருப் பதி னைபிரஞ் செய்யுட்க ளச்சிற் கினிவருமே.

---

ஞானசாதனவிளக்கம் ஞானரசக் கலிவெண்பா
ஆனந்தானுபவ மஞ்சரி ஆனந்தக்குருநாதன் என்னும்
நூற்கட்காசிரியர் காரைக்குடி.
ஸ்ரீமத் ஆனந்தபாரதி சுவாமிகளா லியற்றியன.

சீர்பூத்த மதுரைநகர் தன்னிலுறை கங்கைகுலத் திலகனுகிப்
பேர்பூத்த தெய்வத் துதித்திரட்டை யிப்புவியோர் பேசஞான

மேர்பூத்த புகழ்பெருக வியற்றினன் கணபதிநல் லின்பமோடு
பார்பூத்த குன்றைநகர் முருகனடி மறவாத பத்தனம்மா.

வெண்பா.

இத்தகைய பாக்கள்மிக வெத்தனையோ பாடியிவ
னத்தன ருள்வேண்டமிகு வாசையுற்றான்—முத்தருண்சேய்
சித்தந் தெளிவதற்குத் தெய்வத் துதித்திரட்டைப்
பத்தியுட னேபாடி னான்.

---

குன்றக்குடி
அடைக்கலவபண்டாரங் குமாரர் வித்துவான்
வைரவபண்டார மியற்றியது.

வெண்பா.

வீணைக் கினிவாணி மெச்சுஞானா தனுண்
ணுணினுன் றேவர்க ணன்குவந்தார்—காணீர்
மணமலரார் பூம்பொழில்சூழ் மாநகராங் குன்றைக்
கணபதியின் சொற்றிரட்டைக் கண்டு.

---

அரண்மனை சிறுவயல் உபாத்தியாயர்
திரு ச திருவேங்கடம் பிள்ளை
இயற்றியது.

தேவர்க் கமுதாய்ச் ஜெகத்தோர் செவிக்குணவாய்
மூவ ரகமகிழ வேமொழிந்தான்—பாவலரோர்
போற்றுங் கணபதியா பிள்ளையெனு மாதவத்தோ
ரேற்றுதுதிக் கோவை யினிது.

---





உ

பஞ்சாட்சர

# விரதபந்தம்.

ஓ

மா ம் ம

ம ற ந ல் கு

ய வை லை ம வ பா து

தா தை நெ ஞ் சி லா ம் ந ம

த் க ங் சு பொ வா ப ப் ற பி ம்

க ம் போ த ய ன் செ ய் வெ

ரு ணீ ண் வெ ணி ன தா

ரொ டெ ன் று ந்

தே ரே ன்

து

சா வெ

---

வெண்பா.

சாதுவென்ரே தேரொடென்றுந் தானணிவெண் ணீராகம்
போதயன்செய் வெம்பிறப்ப வாபொசுங்கத்— தாதைநெஞ்சி
லாம்நமது பாவமலை வையமற நல்கும்மா
வோம்நமசிவாயவென் ரோது.

---




V

௨

மதுரை மீனாட்சியம்மன்

# இரதபந்தம்.

ம

ண் து ந்

வ து ரை த் தீ

ழ் வா ள் மீ ன் லி ய

மூ வா ம த னு க் கு வெ ய்

ய் றா ற் மு ட ட் கி க் ர் வ ல

ன் றே வா ச் சி ற் ற ம் ப

றெ ன் லி ய மை ரோ ப

வ ரு ம் பூ ண்

லெ மே ன்

வா

பூ மி

---

வெண்பா.

பூவாமின் மேலெவரும் பூண்பரோ மையலின்றென்
றேவாச்சிற் றம்பலவர்க் கிட்டமுற்றாய்—மூவா
மதனுக்கு வெய்யலின்மீள் வாழ்வதுரைத் தீந்துண்
மதுரைமீ னாட்சியம்மே வா.

---

௳

மயூரகிரிச் சண்முகநாதர்

# இரதபந்தம்

ம

க யூ ர்

த் தா ர வி நே

ர் தா ர் கி து தோ ந்

மே வி உ யி ரி ழை ப் போ ர்

ர் தா ந் மு செ ச் ர் வே க ங் ல

ல ம் பே வா ச மா ர் த் தி

சி த பா ண் த ர் ல

வ ரு மு ன் ப

ண கா ர்

வா

பா ண

---

வெண்பா

பாவாணர் காணவரு முன்பலர்தண் பாதசிலம்
பேவாச மார்த்திலங்க வேர்ச்செழுந்தார்—மேவி
உயிரிழைப் போர்ந் தோதுகிர்தார்த் தாரவிநேர் யூக
மயூரகிரிச் சண்முகா வா.

---



# அவையடக்கம்.

## வெண்பா.

என்னறிவிற் கெட்டியவா றேசுந் திரமொளிவிட்
டுன்னரிமுன் மின்மினிப்புட் கொக்குமே—வன்னையன
குற்றங் களைந்து குணந்தழுவு முன்னோர்நூல்
கற்றுந் தெளிவார்கண் முன்.



குன்றக்குடி

## தோகையடி விநாயகர் பதிகம்.

கருணைபொழி மெஞ்ஞான வருணோத யாலயக்
கடவுளா யுலக மெங்குங்
காக்கின்ற மெய்கண்ட தெய்வமே சைவமே
காருண்ய வரத மூர்த்தி
அருணகிரி யப்பன் றிருப்புகழ் முளங்குமோ
ராறுமுக வேளண்ணனே
அகமுகத் தாயென் னகத்தே ஒளித்தவோ
ரதிசயம் விளைத்த தேவா
மருணமுவ ரூபரூ பானந்த வள்ளலே
வாசாம கோசரேசா
மாதாபி தாகுருவும் நீதா னெனக்கருள
மதயானை முகநா தனே
தருணமிது வரவேண்டு மிருவினை யெரித்திடுஞ்
சச்சிதா னந்த வாழ்வே
தாதையுள மகிழ்குன்றைத் தோகையடி வளர்கின்ற
சத்திக் கணேச மணியே. (1)

சீதாம் புயக்களப பாதார தண்டையுந்
திகழொளிப் பொன்னரை ஞாணும்
செந்துகின் மருங்குலும் பேழைவயிறும் செய்ய
திருமார்பி னுபாரமும்
போதார்ந்த வத்தமும் பொருமேக தந்தமும்
போர்மதக் கழிறு னனப்
புகர்மாமை யுந்திலத சிந்தூர வாசமும்
புயாசலப் பூமாலையும்
போதா டிளைத்தநவ மணிபூத்த கிரீடமும்
பொற்குழை யிலங்கு காதும்
புழைக்கையுஞ் செம்பவள மேனிப்ர காசமும்
பூரணக் கருணை விழியும்

சாதாந் தயாளமுங் கண்டும்மை யண்டினேன்
    தயவுகூர்ந் தருளு மையா
தாதையுள மகிழ்குன்றைத் தோகையடி வளர்கின்ற
    சத்திக் கணேச மணியே. (2)

பஞ்சைகளை வஞ்சித்து நெஞ்சார வவர்சீர்
    பறித்துப் பகைத் துளேனோ
பண்பான சாதுக்க ளுண்பன சிதைத்தனோ
    பாவலரை வைதுளேனோ
கொஞ்சமுங் காருண்யம் நெஞ்சினினை யாமலே
    கொலைசெய் தருந்தினேனோ
கூறுபர தாரகற் புக்கெடுதி செய்தனோ
    கோயில்க ளிடித் துளேனோ
வெஞ்சினங் கொண்டனோ விதிதவறி நின்றனோ
    வேதநிந் தனை செய்தனோ
வீதிமுள் ளிட்டனோ வெறியுண் டலைந்தனோ
    வீண்பொழுது போக்கினேனோ
தஞ்சமென் றிதுகாறு மோதெனைப் பாராத
    சடைவென்னை சொல்லு மரசே
தாதையுள மகிழ்குன்றைத் தோகையடி வளர்கின்ற
    சத்திக் கணேச மணியே. (3)

சம்சார சாகரத் திம்சைசகி யாமலென்
    றலைவிதியை நொந் தழுவனோ
தன்னு லியன்றவரை யன்னதா னஞ்செயத்
    தரமிலா மைக்கழு வனோ
அம்சா ரலர்க்கொழுந் ததாபைந் தொடிகண்மா
    லகந்துளைத் தற்கழு வனோ
அண்டங் குலுங்கவதிர் கொண்டேம னணுகுநா
    ளார்வருவ ரென்றழு வனோ
எம்சாமி யுமைவிட்டு வம்சவழி தேடுமா
    றிருமாந்த தற்கழு வனோ

என்றுதான் ஞானம்வரு மென்றுதா னழுவனோ
ஈனவயி றுக்கழு வனோ
தச்சாய லறியாதி யானழா வண்ணமலர்
தாட்கடிமை கொண் டருளுவீர்
தாதையுள மகிழ்குன்றைத் தோகையடி வளர்கின்ற
சத்திக் கணேச மணியே. (4)

ஏகாந்த மாகவெற் கிசைவுற்ற ஓரிடத்
திருந்தோத விதி யில்லையோ
இன்பவீ டெய்துமா றும்பாத மறவாம
லெண்ணுணர் வெனக்கில்லை யோ
மோகாந்த காரத்தை மூட்டோ டறுக்கவோர்
முத்திவா ளெற்கில்லையோ
முன்னலான் மன் னுயிர்க ளன்னுயி ரெனப்பார்க்கு
மோட்சவீ டெற்கில்லை யோ
தேகாதி பிரபஞ்ச மெல்லா மறந்துயான்
சிவமாக வழியில் லையோ
சின்மயா னந்தமாந் தன்மயங் காணஓர்
திருவாக் கெனக்கில் லையோ
சகாத வேதாக மாதிபுகழ் சோதியே
சங்கை தீர்த்தருள் புரிகுவீர்
தாதையுள மகிழ்குன்றைத் தோகையடி வளர்கின்ற
சத்திக் கணேச மணியே. (5)

நினதடிய ரடிதொழாப் பாவியுல கத்தே
நிராசை வையாத பாவி
நியமமில் லாப்பாவி நயமுமில் லாப்பாவி
நெடுநா ளுழைத்த பாவி
வனசருக்கு காய்கனி பரித்துண்டு தானுய்
மனோலய முறுத பாவி
மாணத்தை நீக்கியந் தக்கரண சேட்டையை
மறித்தொடுக் காத பாவி

தனமென்ற எக்கம் பிடித்தமா பாவியோர்
தவசுமில் லாத பாவி
சத்தியமி லாப்பாவி புத்தியுமி லாப்பாவி
தருமமில் லாத பாவி
தனதெனத் தனுவைவளர் பாவியுமை நம்பினேன்
தடையின்றி யருள் புரிகுவீர்
தாதையுள மகிழ்குன்றைத் தோகையடி வளர்கின்ற
சத்திக் கணேச மணியே. (6)

கனகதண் டிகையேறி வாழ்வோரு மெமன்வந்து
காலமோர் பிடிசாம்ப ருய்
கட்டையி லெரிந்தழிதல் கண்டுமுன் பாதமே
கதியென்று நாடு திலையே
தனமாதர் மையறீர்த் தெற்குதவு தில்லையே
சாத்ரவழி செல்லு திலையே
தாமுணர மாட்டார் சிநேகம் விடுதில்லையே
சாது சங்கம் புகுந்தே
சனகர்மனு தன்னநின் றெனதுசொற் கேட்காது
சர்வாண்ட முஞ்சுற்று மிச்
சனியனுய் வந்தமன வாயுவை யடக்கவோர்
தந்தர மந்திர மில்லையோ
தனதன வெனப்புருவ மையமா னையனே
சாயுட்சிய முத்தி முதலே
தாதையுள மகிழ்குன்றைத் தோகையடி வளர்கின்ற
சத்திக் கணேச மணியே. (7)

ஈரேழு லோகத்தை யோர்குடையி லாண்டென்ன
எண்சித்தி பெற்று மென்ன
எழுகடலை யுண்டென்ன எட்டுமலை களையெடுத்
தெற்றி விளையாடி னென்ன
காரேழு மகலாது பொழியவைத் தென்னநாற்
கவிபாடி னென்னமேலைக்

கற்பாந்தம் வைத்தென்ன கற்றென்ன யாத்திரையாய்க்
காசிவரை சென்றுமென்ன
பேரேழை யாயென்ன சீராள னாயென்ன
பேசாதிருந்து மென்ன
பேரிற் றுறந்தென்ன துறவா திருந்தென்ன
பேரின்ப வமுத மூறிச்
சாரேக வொளிகண்டு தன்னையறி யார்க்கென்ன
சந்தோட முண் டண்ணலே
தாதையுள மகிழ்குன்றைத் தோகையடி வளர்கின்ற
சத்திக் கணேச மணியே. (8)

எத்தனை யுரைத்துமுன் செவியிலெள் ளளவேனு
மின்னமுங் கேட்கவிலையோ
ஏழையடி யேன்படும் பாடெலாம் பார்த்தும் நீ
ஏனென்று கேட்கொணுதோ
சித்தனைத் தாடுமா றுத்தேச முற்றிலேன்
றிருவடிக் காட்கொண் டுமே
சின்னயா னுள்ளமட் டன்னவத் திரமீந்து
தீட்சைவைத் தருளுமையா
சத்தியெம தன்னைதரு புத்ராதி மூலமே
சகுண நிற்குண தீதமே
தவத்தோர் கணேசனே தனியாகி லேறுமோர்
தரும துரையே யெனுறவே
சத்துமா வெட்பொறி முருக்கப்ப மொக்குகைச்
சக்கரப் பிள்ளையாரே
தாதையுள மகிழ்குன்றைத் தோகையடி வளர்கின்ற
சத்திக்கணேச மணியே. (9)

நாட்டமா முனதன்பர் கூட்டுறவு வேண்டுமுன்
ஞாபகமெ னக்கு வேண்டும்
நாடோறு மென்னைநீ ரட்சிக்க வேண்டும்யான்
ஞானியாய் வாழவேண்டும்

ஊட்டமுதம் வேண்டுமரு ளீட்டிதர வேண்டுமின்
றுபதேசம் வைக்க வேண்டும்
உன்புகழை யானோதவேண்டுமென் புகழையா
னுரையா திருக்கவே ண்டும்
வேட்டைநாய் போன்னெஞ் சமாட்டமற நிற்கநால்
வேதார்த்த மோதவேண்டும்
மேதினியி லிப்பதிக மோதுவார் கேட்பார்கள்
வேண்டுவ தளிக்கவேண்டும்
தாட்டீக வெளவைப் பிராட்டிபா மணியொடென்
றமிழ்மாலை சாற்று மழகா
தாதையுள மகிழ்குன்றைத் தோகையடி வளர்கின்ற
சத்திக்கணேச மணியே. (10)

---

உ

குன்றக்குடி

தனத்த தனத்ததன

சந்தவிருத்தம்.

நிலத்தி லியற்கையென வருத்து பிறப்பிறப்பி
னிவர்த்தி பெறற்குறுதி தெரியாமல்
நெருப்பி லரக்கன உள் கொதிப்ப விதிக்குரையை
நினைத்து நினைத்தழுது தொழுதேழைப்
புலத்தென லுத்துனிரு பதத்தி னடைக்கலங்கொள்
பொருப்பில் விருப்பமுட னருளாயேற்
புவிக்கு ளிருப்பவர் கணைகைப்ப ருனக்கிதொரு
பொருட்டி லருட்குமர வருவாயே
ஒலித்த சுமத்தனையை அறுத்த மரத்தனையை
யுய்வித்த சிவத்தநெடு வடிவேலா

உருத்திர பத்தினியின் மணித்தன புத்தமுது
ணுரக்கும ரக்கருணை மகமேரே
மலைத்தினை யிற்குருவி விரட்டிய உத்தமியை
மனத்தி னினைத்தபடி மணமாலை
வனத்தணன் மெச்சவிடு மதிப்புடை முத்தர்புகழ்
மயிற்கிரியிற் குடிகொள் பெரியோனே (1)

---

தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த தனதான.

வடவனலிலே பிறந்து மரவமணி வாயிருந்து
மலைவிலி சடாதரங்கொள் மதிபோலே
வதனமத னுகமங்க ளமைநளின மோகபந்த
மதுரமொழி பேசுபெண்கள் விழிமாலால்
கடவுளுனை யேமறந்து உலகமதி லேதிரிந்து
கருகுமொரு பாவியென்றன் வினைதீர
கருணையக லாதுதுன்று கமலபத மோதுகென்று
கமழ்கையில்வி பூதியென்று தருவாயோ
திடனுமலி யேறியன்று முரணசுரர் மாளவென்று
திருநிரைதெய் வானைமன்ற விடுவோனே
தினமுமன தாய்நினைந்து சரஹண பவாவென் விஞ்சை
ஜெபமிடுவி வேகர்பங்கி லருள்வோனே
வடிவுடைய வாலைதந்த குமரகுரு வேயனந்த
மகரிஷிக ளாலுவந்த பெருவாழ்வே
மதுநதிவி சேடகுன்றை நகரிலடி யார்புகன்ற
வரமருள் கியாதி கொண்ட பெரியோனே (2)

---

தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த தனதான

அக்கினிக்கு மட்குமுப்பி றைச்சியிற் படைத்தகட்டை
அற்புதத்தொ டற்ப மித்தை நினைவாகி
அக்கவப் புரத்திருத் துறக்கமற் றுனைத்துதித்து
அச்ச மற்றிரப் பதற்கு அறியாமல்
இக்கினுக் கினித்தசொற் பணைத்தனத்தி யர்க்கிளைத்து
இச்சையிற் பிணைத்துளைத்து நிதிதேடி
எய்ந்தவித் திருட்டுமட்டை மெய்த்தவத்தை விட்டமட்டி
எப்பிறப்பினிற் சுகத்தை அடைவேனோ
மிக்கவற்பு ருத்திநத்த கத்யரு கருட்ப்பிரமத்தின்
வித்தைசொற்ற சித்தசுத்த சிவமாவாய்
வெற் பாக்கரைத்துரத்தி வெட்டிவிட் டுயர்த்துபத்தர்
விக்கினத்தை வெற்றுகொற்ற வயில்வேலா
நக்கனக் கமுத்தெனப்ப மிக்குமட்சாத் துதித்து
நற்கீரர்க் கனுக்ரகித்த பெருமானே
நத்தனத் தினைப்புனத் திரத்தினக் குறத்திநத்து
நற்சிகித் தடப்ரசித்த பெரியோனே (3)

---

தனதத் தனதத் தனதத் தனதத்
தனதத் த்னதத் தனதான

தழுவித் துணைமுத் தமிடப் பணைகற்
றனர்சித் தசபுத் தகமால்போய்
தணலொத் துவிழிப் புகைதத்து சினச்
சமனத் தவலைக் கழியாமல்
தொழுதற் கறிவைத் தருபொற் கமலத்
துணைபெற் றிடுதற் கருள்வாயே
துருவர்க் கருள்சக் கரசெக்கருட்
டுதிசட் சமயத் தலைவோனே

செழுமைச் சிவைசத் தியெடுத் தசுரச்
சிரசைப் பலியிட் டகுமாரா
திணைமுற் றுமணிக் கதிர்மொய்த் தபுனச்
சிறுமிக் கருமைக் கணவோனே
கழுவிற் சமணப் படரைச் செகுவித்
தகடுட் பிணியற் றாளுதை
கவிவிற் பனசர்ச் சனர்மெச் சமயிற்
கலினிற் குமருட் பெரியோனே (4)

---

தனன தந்த தந்த தனன தந்த தந்த
தனன தந்த தந்த தனதான

துவரி னுஞ்சிவந்த யிதழி னுங்கனிந்த
சுளைபிழிந்த செஞ்சொல் மணிவாய்நீர்ச்
சுவையி னுந்திரண்ட முலையினும் புனைந்த
துகிலினும் பரந்த விழியாலும்
எவன மைந்தர் சிந்தை கவர் நிதம்ப மின்க
ளிடமயங்கி மந்த மதியோனு
யிரவொ டந்தி சந்தி மருவி விந்து சிந்தி
எழிலுடம் பொடுங்கி மெலிவேனே
பவன முண்ட செங்கணரி முகுந்தர் தங்கை
பருவ தம்பிறந்த தனமீனாள்
பவுசு கொண்டிலங்கு மதுரை வந்துவந்த
பரமர் சொந்தமங்கை புதல்வோனே
நவரசம் பொதிந்த குறமடந்தை யண்ட
நறவுடன் பிசைந்த தினைமாவை
நகைபுரிந் தருந்தி மணமுடிந்து குன்றை
நகர்விளங்க வந்த பெரியோனே (5)

தனன தனதான தனன தனதான
தனன தன தான தனதான

அருண கிரிநா தரரிய புகழோத
அருளு தவதீதப் பெரியோன்காண்
அரச வனமேவு சரவ ணபவாவெ
னடிய வர்சிநேகப் பெரியோன்காண்
அருண ஜெபமேறு மறைய வர்கள்பேரி
லதிக விசுவாசப் பெரியோன்காண்
அகதி களின்மீதி லகமி ழகுநீத
ரகமு கவிநோதப் பெரியோன்காண்
தருமர் தவஞான முனிவர் கவிவாணர்
தனையி கழ்வர்கோபப் பெரியோன்காண்
தனது மணவாளர் மனதொ டிசைமாதர்
சபத ஜெயவீரப் பெரியோன்காண்
வருண மலரேன பதிவி ரதைமார்பில்
மருவு முருகேசப் பெரியோன்காண்
மழை கழனி வாழை குளமடவி சூழும்
மயில் மலையில் வாழும் பெரியோனே [6]

---

தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன தனதான

பலவித சந்தத் தழைப்பி லேகவி
பயிற்ற சங்கப் படிப்பி லேயடி
பாவிய கொங்கைக் குடத்தி லேகயல் விழியாலே
பழகிய சொந்தச் சுருத்தி லேமணி
பணியிசை புன்பொற் சிரிப்பி லேயலர்
பரிமள கொண்டைப் பகட்டி லேகிளி மொழியாலே
கலவியல் வம்புக் கொழுப்பி லேமத
கதையறை யின்பப் பெருக்கி லேமதி
கவர்முக தங்கத் துறுப்பி லேமன வெறிமூடி

கனக சதங்கைக் கழற்பெ ணுயகர்
பிறகு திரிந்திச் சகத்து ளேசுழல்
கயவனை யன்புக் கடைக்க ணுலொரு விசைபாராய்

உலகை வலஞ்சுற் றுரத்த னேமயி
லுடன்வரு செஞ்சொற் றிரத்த னேவயி
லுவகை யுறுங்கைச் சமர்த்த னேகைலை வளர்மாதா

உமையவ ளெங்கட் குமிக்க பார்பதி
பயிரவி திங்கட் சடைப் பராபரி
உயிர்தரு மிந்துப் பயக்ரு பாகரி தருசேயா

அலையி லதிர்ந்துக் கிரத்தி ஞெடெதி
ரசுரர் குலங்கட் கனர்த்த னேசசி
யருமை யுடன்பெற் றசுற்றெய் வானையின் மணவாளா

அலரய சங்குப் பரிக்கை மீதினு
மிறையவ னங்கொக் கரித்து லாவிடு
மதிசய குன்றக் குடிக்குள் வாழ்வுயர் பெரியோனே (7]

---

தனன தனதந் தனதன தாத்த
தனன தனதந் தனதன தாத்த
தனன தனதந் தனதன தாத்த தனதான

அமுத மொழுகுந் துவரிதழ் காட்டி
அழகு தவழுங் குழன்முகில் காட்டி
அளிகண் முரலுங் கடிமலர் காட்டி மகமேரு

அலர நிமிருந் துணைமுலை காட்டி
வெளிர் முலையரும்பு முருவல் காட்டி
அரிமி னரவிந் தமனகை காட்டி மயில்போலே

குமுத மணகுங் குமவடி காட்டி
துவடுயின் மருங்கு வினிழை காட்டி
குழைபொ ருதுசெங் கயல்விழி காட்டி யவையூடே

குயிலை நிகர்சங் கிதசுவை காட்டி
வளையி னொலிதண் டையினொளி காட்டி
குமிரு மிருதங்க முடுகு காட்டி நடமாடும்

சுமுக சுகசுந் தரமட வார்க்கு
மனது கெடுமெந் தனையொரு வார்த்தை
சொலி வருகவென் றருளொடு பார்ப்ப தொருநாளே

துறவு பெறுமெந் தைகருணை மூர்த்தி
அருண கிரிசெந் தமிழ்மணி கோர்த்த
சுடர்வ டமொடுங் கதிரயில் சாற்றும் புயவேளே

கமுகு தெனரம் பைகொள்குலை சாய்த்து
வயலு ழுவர்திண் புயமலை பாய்த்து
முவகை யொடுசந் திரனுட றேய்த்து நெடுவாளை

கனிகொ டுலவும் பலவளம் வாய்த்த
யெரிய புகழ்கொண் டுயர்மது வாற்றின்
கறைய ருகுறுஞ் சிகிநக சேத்ர பெரியோனே (8)

---

தனதத் தனதத் தனதத் தனதத்
தனதத் தனதத் தனதத் தனதத்
தனதத் தனதத் தனதத் தனதத் தனதான

குவடிட் டுளைபட் டணுவொத் ததுகட்
புகைசொர்க் கமுகட் டொடுமுட் டியலைக்
குணிரைத் தபுனற் பருகித் திடர்பட் டிடநாறு

கொடுமற் கரிமத் தகமொத் திழகிப்
பணைவுற் றிறுகித் துணைபெற் றுளிர்பொற்
குரிதைத் தரவிக் கைவிதிர்த் தெழுதற் புதகான

கவசத் தையழித் துமனத் துறவிக்
கிழிவைத் தருவித் திளைஞர்க் கழகைக்
கலவித் துலகைத் தன்வசத் திசைபொற் றனமானார்

கலவிக் குலவிக் கலகத் தலகிற்
றுயர்பட் டறிவற் றொருபத் திநெறிக்
கவிசொற் றலுமற் றலைதூர்க் குணனெற் கருள்வாயே

சிவசிற் பரவெற் பில்விகற் பமறுத்
தொருமித் துனைநத் ததிசித் தாகத்
திருமெய்த் தவமுச் சுடருச் சிவெளிச் சிவயோகா

சிகரக் கிரிதிட் டெனமுட் டசுரத்
தளமக் கினிபட் டெரியப் பொருசத்
திரசெக் கரஉக் கிரவிக் ரமபட் சமயூரா

புவியைக் கணிமைக் குமுன்சுற் றிமலைப்
புடவிற் றவிநற் கிரர்மெச் சவரக்
கனைவெற் றுமகத் வவகத் யரகக் குருநாதா

புரிமெத் துமயிற் கிரியிற் கவிதைப்
புலவர்க் கருள்வித் வசமுத் ரதிருப்
புகழைப் பகர்பத் தர்நினைத் ததருட் பெரியோனே (9)

---

தந்தத்தன தந்தந்தன தந்தத்தன தந்தத்தன
தந்தத்தன தந்தத்தன தனதான

வம்பைத்துணி கொண்டெற்றிய கொங்கைச்சுமை கொண்டெய்த்தொரு
வஞ்சிக்கொடி என்கத்துவ ழிடையாளை

மங்கைப்பொழில் சந்தைத்தெரு கங்கைக்கறை சந்தித்தலை
மந்தப்பைய லென்றூர்க்குண மொழியாதோ

செம்பட்டய மும்பெற்றிடு சங்கத்தமிழ் பொங்கிக்கமழ்
செஞ்சொற்புல வன்சத்தியின் வாகீச

சிங்கத்தையு முண்கக்குகை கொண்டிட்டக றுங்கற்குண
தெண்டத்தசு ரன்செற்றந கைகொள்வாளா

அம்புத்தியில் வெம்புத்திகொ டண்டர்க்கிடர் தந்தத்தனை
அண்டத்திடை சண்டைக்கொடி நடுசூர

ரன்புற்றணை பெண்கட்புனல் சிந்தக்கிர வுஞ்சக்கிரி
அங்கத்தை வகுந்துப்பெறி வடிவேலா
கும்பத்தில் வருஞ்சித்தா லம்பத்திய டங்கத்தா
கம்பத்திசெய் சம்பத்தருள் குருநாதா
கொஞ்சித்தழு வும்பொற்கிளி யின்சொற்குற வஞ்சிக்கிசை
குன்றக்குடி யொன்றர்ச்சகர் பெரியோனே. (10)

---

## சரஸ்வதி தோத்திரம்.

### வெண்பா.

நானு னெனப்பிதற்று நல்லடியர் தன்னுவிற்
றுனுய் வளருஞ் சரஸ்வதியே—வானுளு
மின்பமும் வேண்டே மெமக்குன் றிருப்பூந்தா
ளன்புட னீண்டே யருள்.

அங்கம் புளகித் தழுதுதொழு வார்க்கிரங்குஞ்
சங்கம் புகழுஞ் சரஸ்வதியே—எங்கனுந்
தன்புகழே செப்பித் தலைகீழாய் நில்லாம
லுன்புகழே செப்புதற் கோது.

முச்சுடரா யன்பாக முண்டகத்தி லேபிறங்குஞ்
சச்சிதா னந்தச் சரஸ்வதியே—யிச்சையென்ப
தில்லா தறிவையறிந் தென்னைத் தெரியவிளக்
கெல்லாஞ் சிவமா வதே.

அஞ்சுதலை நீக்கி யதீதத் துதித்து முன்செய்
சஞ்சிதம் போக்குஞ் சரஸ்வதியே—தஞ்சம்
நடித்தருள்க வென்றே நவின்றேறு நெஞ்சே
படித்தபடி நிற்கப் படி.

மன்றேசு மாற்ற லுடையார் மனமுகத்துந்
தன்றேசு வீசுஞ் சரஸ்வதியே—என்று
முசாருற் றருணுக் குடன்பட் டகமே
விசாரத்தை நீக்கி விடு.

பொங்கடங் கொண்டு புலம்பா தடங்கடியார்
சங்கடந் தீர்க்குஞ் சரஸ்வதியே—துங்கக்
கலைமயிலே மானே கரும்பே மெஞ்ஞான
நிலைமைமேலே சென்றுவி னில்.

கற்குணமைப் பாடிக் கலங்கா திலங்குமருட்
சற்குண மீயுஞ் சரஸ்வதியே—புற்புதம்போற்
றோன்றிய விவ்வரிய தூல மழியுமுன்கே
ளூன்றிய ஞான முறை.

சாமுன்னுற் சாகுந் தவமுடிக்க வொட்டாது
தாமுன்ன லென்று சரஸ்வதியே—தாமின்ன
தென்றுராய்ந் தொன்று யிடைவிடா வின்புறவே
நன்றாக நிற்கும் நவில்.

சந்திரருஞ் சூரியருந் தாரகையும் போனேரிற்
சந்தித் திருக்குஞ் சரஸ்வதியே—செந்திருவார்
பூங்கமல வேதா புலமைமிக்க நாவிருப்பா
யோங்கமல வாழ்வின் குணர்த்து.

அஞ்சே லஞ்சேலென் றபயாத்த மிட்டருளு
மஞ்சே லஞ்சக்கச் சரஸ்வதியே—தஞ்சமெமைக்
காப்பவளே உன்னருளைக் கண்கொண் டுனக்கியற்றி
யாப்பணிந்தெ ளுவுமை யம்மா.

---

கல்லல் சோமசுந்தரேஸ்வரர்

## நவமணிமாலை.

திருமா துளங்கனி பலாவாழை மாவிளா
  தீங்கனி பழுத்தொழுகு தேன்
சிற்று றெனப்பா யுரத்தால் விரக்தியோர்
  செய்தவம் போல வோங்கிப்

பருவரையை வலமாகு மோராழி யிரதமா
பாற்கரர் விடாய் தணித்துப்
பைம்புயலை யுட்கொண்டு வெண்ணிலா வுண்மாசு
படியாது தேய்த்து விண்மீன்
மருவுதிர்த் தலர்பூத்த கைவீசி யாடியே
வானத்தை முட்டி நிற்கு
மாபுறவ நீழற்குண் மல்குதட மலரன்ன
மந்திசங் கன்றில் காடை
துருமயில் புறுகிள்ளை விளையாடி யின்னிசைத்
துதிபாடு கல்லல் வாழ்வே.
சொல்லுமந் தார்பரவு வல்லிசௌந் தரிமருவு
சோமசுந் தரவா தனே. (1)

குலைகொண் டரம்பைபோற் றலையாட்டி யுதயனெழு
கொக்கோ டயிர்க்கு வீசிக்
கோபுரத் தருவையா சீர்வதித் தாங்குள்ள
கோடரங் கட்கேணி யாய்த்
தலைவிமறு நாதனை யழைத்தல்போற் றோகைக
டதும்பவுத் தமிபுத்தி போற்
றண்டென்னை வளருமிரு கறையிலெளி யோர்க்குவெண்
டாளமுன தருண்மாரி போன்
றலையெறிந் தமரர்நிதி சொரிதனேர் மீன்றுள்ள
வார்த்தெவரு நீராட நா
ரூரத்தை மணமகன் போற்பெண்கண் மீதிரைத்
தாடையு மிழுத்தோகை யாய்த்
தொலைவிலே மூழிமண மேறமணி முத்தாறு
சூழ்வளக் கல்லல் வாழ்வே
சொல்லுமந் தார்பரவு வல்லிசௌந் தரிமருவு
சோமசுந் தரவா தனே (2)

மும்மதப் புகர்முகப் போர்க்கரிக ளகழியம்
புழைக்கைமொண் டிரவி கழுவி

மூகிலைநக் நாவண்ணம் விசிரிமுன் ஞம்பிறை
  முளைத்தன துணைக்கொம் புசே
ரம்மதப் பைந்தொடிகள் கொம்மைநே ரண்ணுறு
  ததிர்ந்துனடி யார்போல் வரும்
ஆமையிட பம்பகடோ டொட்டகங் கலைமான்க
  ளாடுமா சங்க முருகு
செம்மனிகர் யாவுமெம் மதமுமுடி வும்மையே
  சேர்ந்துய்யு மாப்போ னிதஞ்
சேண்டட விருட்டவி யுட்புறமு மார்ந்திடி
  திடுக்கிட வொலிப்ப வேண்டுஞ்
சும்மையாய் வள்ளன்முத லேற்குநிதி யோசைவிண்
  டுறைபரவு கல்லல் வாழ்வே
சொல்லுமந் தார்பரவு வல்லிசௌந் தரிமருவு
  சோமசுந் தரவா தனே. (3)

சேடன்முடி யாதார மாய்கொண்டு வெங்கலஞ்
  செம்பய முருக்கி வார்த்த
திண்குரடு மீதிரண் பட்டிய திருத்திமுதிர்
  செம்பவளத் தூண் நிருத்தி
பாடண்டர் மனமன்ன பொற்சுவ ரெழுப்பியே
  பலவைர உத்ரமிட்டே
பஞ்சவர் னக்கற் பதித்துநவ மணிகளாற்
  பதுமை பற்பல வமைத்து
மாடமுமு தாடிகோர்த் தணைவிரித் தலர்தூவி
  மாணிக்க நிலை சன்னன் முன்
மையமொவ் வோர்நிறப் படிகதீ பந்தூக்கி
  வளர்கொடி யிலங்கு மேடை
சூடிமா உம்மோ டிருப்பதனை மேகங்க
  டோன்றில்சூழ் கல்லல் வாழ்வே
சொல்லுமந் தார்பரவு வல்லிசௌந் தரிமருவு
  சோமசுந் தரவா தனே. (4)

மட்டுப் படாத்தன மடப்பிடிக ணெஞ்சுண்
மணத்தன் றுவைத்த மகிழ்வே
மாறாது மாரவேள் கர்வமற வேதா
வகுத்தன விசித்ராங் காரய்
தட்டென்ப தறியாது தர்மமிடு நெஞ்சுடன்
றத்தங் குலாசா ரமே
தழுவிமுத் தமிழ்கற் றிரத்னக வான்பரிதி
தாரைகூ சிச்சி மிட்ட
நட்டமா வேறிச் சுழற்றி விட்ட லர்பூத்த
நந்தன வனங்க டோறும்
நத்தனோ வெனவிந் ரனகமகிழ்ந் திடுவீர
நற்போ ரெலாங்கை தேர்ந்து
துட்டநட் பின்றியுன் சிட்டர்கட் குதவுவார்
துதிகொண்மு ழு கல்லல் வாழ்வே
சொல்லுமங் தார்பாவு வல்லிசௌந் தரிமருவு
சோமசுந் தரவா தனே. (5)

ஐயமற் றருளையுற் றகமாயை நீக்கியறி
வறிமகான் கட்கெ ளுான்று
மாசையாய்த் தொண்டுகொண் டவர்வார்த்தை கேட்டுமுன்
றலையந் தொழுது மின்னோர்
மையலற் றுட்கண் டிரந்துமே வாசையை
மடித்துமோர் பித்தர் போலே
மானிலஞ் சுற்றியெக் குலமெனினு முதமாக்னி
வந்தா லுவந்து சென்று
கையதை விரித்தவ ரிடும்பிட்சை யாங்காங்கு
காட்டன லெனப் புசித்து
காலமே தங்கடந் துடலையு மறந்தியான்
கதிசேர்வ தெந்த நாளோ
தொய்யா மனத்தன்பர் மெய்யாய் நினைத்துமகிழ்
சுகமார்ந்த கல்லல் வாழ்வே
சொல்லுமங் தார்பாவு வல்லிசௌந் தரிமருவு
சோமசுந் தரவா தனே. (6)

ஒருவருக் கொருவர்நா னென்னுஞ் செருக்கினை
 லுபநிடத ரீதி முதலா
யோதியா னேஉயர்வ தென்பதுமு குந்தனே
 உயர் வென்பதுங் கச்சியாய்
திருகல்முரு கலுமாவ னேகதாட் டாந்தந்
 திருட்டாந்த மோதி வீணைத்
தினமலைந் தென்கொலோ சிறுபள்ளி மாணைக்கர்
 செப்பௌவை யுலக நீதி
வருபாட லொன்றோப்ப நடவா துணைத்தொழா
 வாய்வம்ப ரோடுசேர்ந் தால்
வன்கூற் றுதைத்தெரிப் பூதியிற் றள்ளாது
 வாவென்று கொஞ்சுமோ தான்
சுரும்பா ரலங்கணி சுரர்கண்மெச் சறிவான
 சோதிவளர் கல்லல் வாழ்வே
சொல்லுமந் தார்பரவு வல்லிசௌந் தரிமருவு
 சோமசுந் தரவா தனே. (7)

ஏரா ரிளந்தைவடி வேகாட்சி பூங்குழ
 லிளைப்பாறு பூங்கா வனம்
ஏசுவது சற்குருவின் வாக்குவிழி யருளேக்
 கிரண்டங் கையே கற்பகம்
வாரா தரித்தமுலை சங்கநிதி பதுமநிதி
 வாயூறல் தேவ ரமிர்தம்
வன்னதொப் பூழ்பிரண வாலயந் துடைவாகை
 மடியே சமாதி மேடை
சீரார் நடிப்பதே உனதாட லல்குலே
 சின்மயா நீத வீடு
தேகமே நித்தமிக போகமே மோட்சமவர்
 சேர்க்கையே சிவமாத லென்
சோரநினை வாற்பெண்க ளுமை கிடங்கில்வீழ்
 துயர்நீக்கு கல்லல் வாழ்வே
சொல்லுமந் தார்பரவு வல்லிசௌந் தரிமருவு
 சோமசுந் தரவா தனே. (8)

ஔடதந் தின்றென்ன அழகா யிருந்தென்ன
ஆழியி னடந்து மென்ன
ஆரணங் கற்றென்ன வாரணம் பெற்றென்ன
அறுயுக மிருந்து மென்ன
எவ்வினையை நொந்தென்ன எக்கிரியை செய்தென்ன
என்னீரு மாடி னென்ன
இலைபறித் திட்டென்ன ஏற்றுண்டு மென்னமா
வெக்கியம் வளர்த்து மென்ன
ஒவ்விமலை சார்ந்தென்ன உண்டென்ன வுண்ணா
துலர்ந்தென் னுறங்கி னென்ன
ஓயாத வெம்பிறவி நோய்தீர்ப்ப தாமோவு
னுறவிலா துரை பிரமமே
துவ்வா தவர்க்குமிடு சௌபாக்ய வான்கண்மிகு
தொத்து துதி கல்லல் வாழ்வே
சொல்லுமந் தரர்பாவு வல்லிசௌந் தரிமருவு
சோமசுந் தரவா தனே. (9)

---

## கண்ணபிரான் தோத்திரம்

### காப்பு.

கண்ண பிராமியண்ணன் சங்குசக்க ராயுதக்கைக்
கண்ண பிரான்மேற் கவிபாட—நண்ணிபுவந்
திப்போ தகத்து மிரைஞ்சுவே மேகபுழைக்
கைப்போத கத்தின் கழல்.

### நூல்.

ஆதிசோதி யாகிவேத மாகியண்ட பிண்டமா
யோதியோதி யன்றுமின்று மொன்றதாக நின்றவா
சூதிலாத பாலர்தந் தொழும்புகண் டுவந்திடுஞ்
சாதிபேத மற்றராம சாமிவந்து நிற்கவே. (1)

நிற்குமுன்னை நம்பியே நினைத்திசைந்த ஞானநூல்
கற்கவெண் ணிடாதுளக் கலக்கமுற் றுலக்கைபோல்
விற்குமாத ரோடுசுற்று வீணனன்பு பூணுமா
றற்புதப் பதத்தில்வைத்து மாதரிக்க வேணுமே. (2)

வேணுவைத்த கையனே விளங்குமேக மெய்யனே
தாணுமைத்து னாவிலங்கு சங்கனேசி ரங்கனே
பேணுமுத்த மர்க்கனேக பெட்பளிக்கு நின்னையே
காணுதற் கனந்தநாளென் கண்டவம் புரிந்தவே. (3)

புரியநண்ணி டார்தமைப் புகழ்ந்துபாடி வாடியே
உரியினின்று வீழ்கலம்போ லுள்ளுடைந்து நாடொறும்
வரியனென்ற பட்டமிட்டு வட்டமிட் டிராந்திடா
தரிநமோ நாராயணாவந் தாண்டுகொள்ள வேண்டுமே. (4)

வேண்டுவார் நினைத்தவண்ண மெத்தவே கொடுத்திடும்
பாண்டவாள் தனக்குவாய்த்த பண்புமிக்க தெய்வமே
தூண்டிமீனைப் போலவே துடிக்கவேம னார்வரா
தாண்டுவந்தெ னாருயிர்க்கோ ராதரவு செய்யுமே. (5)

செய்யபூ மகட்கிசைந்த சித்திராங்க துங்கனே
ஐயனே பொருப்பெடுத்தோ ரங்குலிக்கண் வைத்தவா
மையலா யனந்தமாதர் மார்பணைத்த மாதவா
துய்யவேத னைப்பயின்ற சுத்தநித்த வஸ்துவே. (6)

நித்தமா வழைக்கவேய் நிகழ்த்துகீத நாதனே
பத்தெனுஞ் சிரத்தனைப் பதைக்கநைத் திராமவென்
றெத்தினத்து மோதுவா ரிடுக்கணோட வந்திடுந்
துத்திநாக மெத்தையிற் றுயின்றிலங்கு மத்தனே. (7)

அத்தனேஎன் னுள்ளுமுற்ற வாதிமூல மென்றுமோ
ரத்திகூப்பி டக்கரா மறத்தொடுத்து வந்தவா
பத்தரோடு நித்தமும் பசுந்துளாய் மணக்கவே
நர்த்தனஞ்செய் ஞானதீப வோம்நமோ நாராயணா. (8)

நாரியோ ரிடத்திலுற்ற நக்கனீயு மொன்றென
நேரிலே நினைத்தறிந் திடாதுநிந்தை பண்ணுவா
ரூரிலே திரிந்துமுன்று முய்விலா தழிந்தெமன்
போரிலே தவித்திடாது போவதெங்க ரங்கனே. (9)

எங்கும்நாம ரூபமற் றிரண்டிலா திலங்குமா
றிங்கெனக் கனுக்ரகித் திராஜயோக மீகுவாய்
சங்கையற் றிருக்கவே தனித்தருச்சு னர்க்கருட்
டங்கநேர் விளக்குநா றனைப்புகட்டு மாயனே. (10)

---

## இலக்குமி தோத்திரம்.

செங்கட் டிருமா றிருநெஞ் சிருப்பிடமா
மெங்கட்கு மிக்க விலக்குமியே—திங்கட்
கிலக்கா வதனத்தா யெப்போது மென்றற்
கலக்க ணணுகா தருள். (1)

அருளரு ளென்றேற்று மடியார்க ணெஞ்சத்
திருளிரிய மெஞ்ஞான வென்றாழ்—விரிகமலப்
பொன்னே உனதடியைப் பூசியா நிற்குமெனக்
கென்னே யிரங்காத தேசு. (2)

ஏசுங் கருமா லிருதயத்தை யாட்டகினா
வீசுங் கருங்கேச மெல்லியலா—யீசனுக்கோர்
தங்கையே சீதேவித் தாயே யெமக்கருளச்
சங்கையே ஞேதித் ததி. (3)

ததியருந்தி யாமேய்த்துச் சங்கங்கைக் கொண்டு
விதியருந்தி யார விரித்த—கதியரங்க
நாதனை மெய்தழுவு நாயகியே யின்னுமென்னே
வாதனை செய்யாது வா. (4)

வாவாவென் றேற்றுகினு வைகினுமென் னுட்சற்று
மேவாவம் பென்கொல் விளம்பம்மா—தூவார
மாற்றெருழுக்கு நேரிலகு மம்பொற் குடமுலையாய்
போற்றெருழுக்க மேனும் புகல். (5)

---

## அரண்மனை சிறுவயல் மும்முடிஸ்வார்மீது

### தோகை விநாயகர் காப்பு.

ஈகை யடிமாத ரிசைபாடுங் குன்றைநகர்த்
தோகையடி யானைத் தொழுதக்கால்—வாகை
உரகவிஞர் சென்னிக் குவந்தேற்றிப் போற்றும்
வரகவிக டானே வரும்.

அறுவாமு துண்டானு மானை முகத்தானுங்
கறுவருணக் காளியுமே காப்பாம்—சிறுவயலா
ரெற்றுப் புறுமெரிமேன் மும்முடியான் றங்கவிதை
முற்றுப் பெறுமாறு முன்.

உண்டென மறைகளோதி யுரைப்பரி தெனவுந் தேவ
ரண்டரண் டலகிலாவா யருட்பொலிந் திலங்கு மன்று
டெண்டொடைத் தடதோட் பெம்மான் மும்முடி யிறைவன்று
கண்டனங் கலிக டோக கமழ்சிறு வயலிற்றனே. [ஸேக் (1)

தானிதென் றறியாவண்ணஞ் சளஞ்செய்வீ னுடலைநம்பிக்
கானினின் றுருகுமான்போற் கலங்கினேற் கிரங்கியன்பாற்
றேனினின் றவருபோதுத் திருவடிக் காளாய்க்கொண்ட
தானினிப் பெறும்பேறென்கொ லருட்சிறு வயற்பெம்மானே (2

மான்மல ரயனுஞ்சீதாண் வணங்குதற் கன்னுட்டேடித்
தான்மகிழ்ந் துனையாநிற்கத் தழைத்தசெஞ் சுடர்த்தீவண்ணு
மீன்மலி விழியாள்பாக விமலமும் முடியப்பாஉன்
கான்மலர்க் கெளியேனெஞ்சங் கவிந்ததுன் கருணைதானே. (3)

கருத்தூனே நிருத்தமாடுங் கண்ணுத லரசேயெங்கட்
கொருத்தனே உயிரேஞான் வொளிச்செழும் பிழம்பே வேதத்
தருத்தனே அடியார்கூட்டத் தமருமும் முடியையயா நின்
றிருத்துணைப் பாதம்பெற்றுற் ஜெகத்தியா வரிதென்பேனே. (4)

தென்னவன் மகளோடேரிற் றிருந்துமிந் தலம்புங் கங்கை
பன்னகங் கடுக்கைசூடிப் படர்ந்தமும் முடியெங் தாயே
அன்னமுந் துணியுஞ்சோரா தளித்துளத் தருட்பால் வார்த்தீண்
டின்னமும் பிறவாவண்ணமி யம்புதி சுயம்பினுவே. (5)

சுயம்புவா யொருவராலுஞ் சொல்லொணுச் சுடராமட்ட
கயம்பணி நீலகண்டக் கடவுளே குடவுளார்சின்
மயம்பொலி மும்முடீச வள்ளலே வருவா யேமன்
பயம்பிடித் தழுநாண் முன்னும் பதப்புணை தருமா றின்னே. (6)

இன்னறீர்த் திரவெல்லென்று மேழையேற் கெதிரே நின்றுன்
சன்னதி வழியேகாட்டித் தமரெனக் கிருபை பாலித்
துன்னத வொளிவிலோர்தற் குரைத்தலு முளவோ வெங்கு
மின்னுமும் முடியெந்தேவே வியன்முலைச் சிவை தங்கோவே.(7)

தங்கமா ரமுங்கோவூரின் றருவிரு நிதியுங் கேட்டுன்
செங்கழல் பணிந்தே னில்லேன் றிருவருள் பெறலென்றென்றே
இங்கியா னிரைஞ்சு பாவத் திரங்கிலாயெனி னென்செய்கேன்
சங்கரா மும்முடீச தாணுவே தவத்தோ ரேறே. (3)

ஏறிலே றிமையமின்னுட் கியைந்துடல் பகுந்தே தந்து
மாறிலே சடைவிரித்தா டத்தனே அடியே னென்றன்
பேரிலே கருணைகூர்ந்து பிரமசிற் சுகவேதாந்த
ஓரிலே வுனக்கே வாளா யுவந்தழைத் தருள்செய்வாயே. (9)

வாய்திர வாதுளோர்போ தோம் நமசிவாய வென்பார்
தாய்தமர் தாணுய்நின்று சகலசித் தியுந்தந்தாளு
மோய்விலாக் கருணைமீறு முவணமும் முடியெந்தாயிச்
சேய்தனக் குனக்குநன்றுஞ் செயலனைத் தருள்செய்வாயே.(10)

---

வெண்பா.

காலன் வருமுன்னே காதுசெவிடா முன்னே
கோல விழிகுருடாய் போமுன்னே—ஆலமருந்
தீசா சிறுவயலா ரெம்மானே மும்முடியா
கூசா துனக்காளாய்க் கொள். (1)

கொள்ளித் தலையெறும்பாய்க் கும்பிக் கிறைதேடி
உள்ளத் துயரோ டுழல்வேனோ—வள்ளலென
நீயே சிறுவயலி னின்றிருந்து மும்முடியெந்
தாயே சிறுவனியான் றுன். (2)

தான்போன போக்கே சரியென் றறிவின்றி
வான்போன லியாதுன் வார்த்தையினாற்—கான்போய்ப்
பிழைத்திருக்கு முத்தர்தமைப் பேணுவா மீதற்
கழைத்தருளு மும்முடியை யா. (3)

ஐயம் புகுந்துண் டடியாரைக் கூடாது
வையம் பனையவிழி மானாரை—ஐயையோ
கைபிடிக்க வெண்ணிக் கலங்கினேன் மும்முடியா
னெப்படித்தா னுள்வா னெனை. (4)

எனையறிந்து கொள்ள விசைமும் முடியப்
பனையறிந்த பின்னும் படிப்பே—னனவரதம்
மூத்திரத் தீக்குழியில் மூழ்கிக் குழைந்தநெஞ்சே
சாத்திரக் குப்பையெலாந் தள்ளு. (5)

தள்ளும் பொருளிலதாய்த் தானேதா னாகவளர்ந்
துள்ளும் புறமு மொருவடிவா—யுள்ளுதோ
ரெம்மிடியும் பஞ்சாக்கு மீசன் சிறுவயலின்
மும்முடியான் சொன்ன முறை. (6)

சொன்னபடி கேட்டாற் சுகமா யிருப்பாயே
பின்னடப் தெண்ணாப் பிணநெஞ்சே—சென்னெல்விளை
தம்முடை பாராத் தருமச் சிறுவயல்வாழ்
மும்முடி யையனார் முன். (7)

முன்னை வினையொழிய முப்போது மோதுதியே
அன்னை கருவின்ன மடையாம—லென்னெஞ்சே
சோதி வட்டத்துள்ளே சுடர்விரித்து மன்றாடுஞ்
சாதிகெட்ட மும்முடியான் றாள். (8)

தாளைச் சடைச்சியர்தஞ் சையோகக் கேணியில்வீழ்ந்
தீளைக் கிடந்தந் திளையாதாள்—வாளையன்ன
கண்ணி கருணை கடாட்சிக் கிடம்பரிசே
பண்ணிய மும்முடியப் பா. (9)

அப்பாநினை யலதிங் காரைச் சதமாவே
றொப்பேது மில்லா துயர்சோதீ—செப்ப
முயலா விடினுமன்பான் மும்முடியா நின்றாட்
கயலா விடாம லருள். (10

அருளே வடிவெடுத்தா டாதிமத் யாந்தப்
பொருளே யடியேன் புணையா—கருமுறவே
செப்பறிய மும்முடி யெந்தெய்வமே ஐவரொடுங்
கொப்பரிய விஞ்சை யுரை. (11)

---

அரன்மனை சிறுவயல்

கருணை கடாட்சி அம்மன்

கலிவெண்பா.

[1] பாதச் சிலம்பதிரப் பண்டாடு மும்முடியார்
காதற் கருணை கடாட்சியே—வேதத்
[2] தடங்காத மெய்ப்பொருளே அண்டருளப் பூமி
தடங்கு மகிலாண்ட வன்னே—சடங்கான
[3] மங்கையர்கள் சூழ மயில்போ னடந்துவரு
மங்கையர்க் கண்ணு யபிராமீ—எங்குமொளிர்
[4] ஞான மணி விளக்கே நாராயணர்க் கிளைய
தீன தயாளச் சிவகாமீ—வான

[5] மாசாள் வரமளிக்கு மாவுடை யாச்சி
சிரசா லிரந்துண்டான் றேவி—பரசமய

[6] கோளறியுந் தாயே குணவீர மாகாளீ
வேளறிவி னிற்கின்ற மீனாட்சீ—நாளடைவில்

[7] நண்ணு மடியார் நனவு கனவினு வந்
துண்ணு மமிழ்தீ யுருத்திரியே—விண்ணோர்

[8] புகழும் பொருப்பளித்த பொன்னழகித் தாயே
யிகழும் பழிகாரர்க் கேமீ—அகழிவளர்

[9] கெண்டைகளை வண்டு கிளைகூட்டித் தாலாட்ட
முண்டகம் பூர்க்கு முகுந்தனூர்—சண்டினியே

[10] அன்னங் கணைத்தையெலா மண்டசமென்றே வடைகாத்
தன்னுங் கருவனூ ருத்தமியே—மின்னுங்

[11] கதிர்வீசு கங்கணக்கைக் கன்னியர் பந்தாடு
மெதிரிலாக் கீரனூ ரெந்தா—யிதிகாசங்

[12] காவிய புராணங் கலைக ளுபநிடதம்
பாவுமுறை தில்லைப் பதிவிரதா—காவிநெடுங்

[13] கொண்ட லுறங்குங் குரங்காடு நற்றுறைவாழ்
குண்டலீ காரைநகர்க் கொப்புடையா—யண்டத்

[14] தயிரா வதக்குரிசி லஞ்சலிசெய் கோட்டூ
ரியல்பா யிருக்கு மிசக்கீ—அயனரியு

[15] மண்ணாந்து வந்ததிரு வண்ணா மலையரசா
ளுண்ணா முலையே உமையாளே—தண்ணார்

[16] பண்டைமலை யாளப் பகவதியே மெய்த்தொண்டர்
விண்டுலவுங் காசி விசாலாட்சீ—கண்டெகின

[17] மஞ்சுந் திருநடையா யாவுடையார் கோவிலுக்குட்
கொஞ்சிக் குலாவுங் கொழுங்குயிலே—விஞ்சையரும்

[18] பேசிப் பிரபலமாய்ப் பேணுங் கரிவலனூ
ரோசை படநடிக்கு மொப்பனையே—சாசுவத

[19] ஒன்றே உயிர்க்குயிரே ஒதுந் திருக்காஞ்சி
நின்றே வரங்கொடுக்கு நின்மலியே—பொன்றலரும்

[20] போற்றுங் குருவருளே பூணும் பனையூரி
னூற்றங் கரைவாழு மஞ்செல்வி—சேற்றினடுங்

[21] கம்பமெனு வீழாக் கருத்தோ டொருத்தவர்சேர்
கம்பனூ ராளுங் கறுங்கொடியே—செம்பவள

[22] வாயா யவிராலீ மற்செய்க் கயருவிப்
பாயா டவிசூழ் பரங்கிரியாய்—ஓயாமற்

[23] காடைகுயி லன்றில் கதுவாலி சேவல்புறு
பேடைகினங் கூவும் பிரம்பூராய்—கோடரங்க

[24] ளத்த மரத்தை அசைத்துக் கனிபறிக்கு
மெத்த விசித்திரஞ்சேர் மேலூராய்—சித்தர்திரள்

[25] கூடி யவரவரின் கொள்கை நிறைவேறத்
தேடி வணங்குஞ் சிவகிரியாய்—பாடிமிகப்

[26] பாவாணர் போற்றும் பரம்பக் குடியாளே
நாவா லுரைப்பரிய நல்லூரீ—ஜீவரெலாங்

[27] கண்டே மனமகிழுங் காளாஸ் திரியாளே
அண்டோர் திருச்செங்காட் டம்மையே—தண்டரளத்

[28] தாரிலகுங் கந்தரியே சங்கரநா ராயணன்ற
னூரி லிருக்கு முபகாரீ—பேரையூ

[29] ரம்மா கழுகுமலை யாளே சுருளிவெற்பிற்
சிம்மா சனத்திருக்குஞ் செல்வியே—கம்மாகு

[30] மெட்டிக் குடியா யிலந்தம் பலக்காளீ
பட்டினத்து மேவும் பசுங்கொடியே—வெட்டுடைய

[31] நாயகியே தென்காசி ராமேஸ்வ ரம்புலியூர்
கோயிலூர் கீழூர் குளிர்மானூ—ராயமுடன்

[32] சீரார் மயில்மலையுஞ் செவ்வை யுடன்காக்கு
மீராறு லோகத் திராணியே—வீரான

[33] புல்ல ரணுகாப் புகழ்சேர் சமிவனத்தாய்
வல்ல திருக்கூடல் வாயலாய்—சொல்லுதிரு

[34] நெல்வேலிக் காந்திமதீ நெட்டூரின் முத்தாளே
சொல்லுவே தாரண்யச் சூலாயீ—எல்லோருங்

[35] கோருங் குருடிமலை கொல்லிமலை குற்றாலம்
சேருங் கதிர்காமஞ் சென்னிமலை—வாருதிசூழ்

[36] செந்தூர் பழனிமலை செப்புஞ் சுவாமிமலை
விந்தமலை சோலைமலை வெள்ளிமலை—கந்தமலை

[37] வேளூ ரழகுமலை வெண்ணைமலை வள்ளிமலை
ஆளூ மிமயமலை யானைமலை—நீளுமருண்

[38] ஞானமலை எழுமலை நாகூரின் செங்கோடு
வானப் பிரான்மலை வராலிமலை—கானத்

[39] திருமலை சிராமலைநற் றென்மலை யிராம
கிரிபொதியை நாகமலை யாவெற்—பெரிமலைமா

[40] கைலை குருமலையுங் காட்சி கொடுப்பவளே
ஐவரின் றாதர்க் கருமிளையாய்—மெய்மொழிசேர்

[41] கல்லல் சிராவயனற் கண்டவி ராயனகர்
மல்ல கண்ட மாணிக்க மாநேமம்—நல்குரட்டி

[42] மாத்தூர் திருப்புத்தூர் மட்டியூர் காளாப்பூர்
சீர்த்திமிகு நெற்குப்பை செங்கோட்டை—பார்த்தனூர்

[43] கானாடு காத்தான் கனத்தபல வானாடு
மானாடு சூரைநகர் மற்கடம்பூர்—தேனுச்சி

[44] அம்மன் புரிசாக்கை ஆத்தங் குடிவேப்பூ
ருண்மையா முத்தா கோசமங்கை—தண்ணளிசேர்

[45] காளையார் கோயில் களரி னுருவாட்டி
தாளைமல ருங்காஞ்சி தண்டணிகை—கூளையனூர்

[46] பட்டயங் கலந்தேவ கோட்டை இறைவைசெரி
மட்டி லிலஞ்சி மயிலாப்பூர்—திட்டூர்

[47] திருவொற்றி வேளூர் சிலம்பூர் திருவாங்கூர்
பெருகு மிளையாத்தன் பேரூர்—தருகு

[48] மினுப்பக் குடிவேல னென்னுங் குடிமா
சினுகை யதங்குடி சேத்தூர்—நிலக்கோட்டை

[49] உப்பையூர் கொன்னையூ ரொக்கூர் மதகுப்பட்டி
ஒப்பில் மருதங் குடியுராசூர்—கொப்பனும்

[50] பட்டி வலையபட்டி பள்ளத்தூர் செக்காலை
பட்டினஞ் சன்னவனம் பைங்கிளியூர்—கோட்டையூர்

[51] சொக்கநகர் பூங்குடி நற்சோழபுரம் வாடிபட்டி
பக்கந் திருக்கோட்டி பாகனி—சிக்கல்

[52] இடைக்காட்டூ ராலம்பட் டேழூர் தேவட்டு
கடலூ ரிராயபுரங் கண்ணூர்—கடியாபட்டி

[53] புள்ளாச்சி கன்னபுரம் பென்னு டளவைநகர்
புள்ளிருக்கும் வேளூர் புதுக்கோட்டை—பிள்ளையார்

[54] பட்டி நயினாரின் பட்டிகொட் டான்பட்டி
இட்ட புதுப்பட்டி எரியூர்—திட்டதெக்கூர்

[55] மைபாலம் பட்டி மணப்பாறை தெம்மாப்பட்
டையார் தெக்குப்பட் டகத்திப்பட்—டுய்காளை

[56] பாளையநாடு பனங்குடி யாண்டிபட்டி
காளையார் மங்கலங்குன் னங்கோட்டை—பாளைகமழ்

[57] கூளிபட்டி யாரவயல் கூந்தலூர் மாங்காடு
ஆளும் புளியநக ரவரையூ—ரேழையிலா

[58] ஆலங் குடியுலகம் பட்டியல வாக்கோட்டை
கோலப் புலிக்குத்தி கோவானூர்—சாலநல

[59] நாட்டரசங் கோட்டைபல நாட்டி லிருந்தருளும்
தாட்டிக மான தயாபரியே—கேட்டொருக்காற்

[60] கண்டார்க்கும் புல்லரிக்குங் கல்கத்தா காளியே
வண்டார்க்குங் கேச வனப்பேச்சீ—பண்டார

[61] வல்லீ மகமாயி வாலை புவனேசி
செல்லீ வராகி சிவயோகி—புல்லா

[62] மலையைப் பிடுங்கி மயானத்தி லாடு
நிலையைத் தவிராத நீலீ—அலைகிழிய

[63] ஊதி விளையாடு மோங்காரி ரீங்காரி
ஆதி பராசத்தி யம்பிகையே—தாதியரோ

[64] டூர்கோலஞ் செய்வா யுலகங் கிடுகிடெனப்
பார்கோலஞ் செய்யும் பயங்கரீ—போர்மகுட

[65] னூனைக் குடித்து உடம்பை யொடித்தெறிந்து
மானைப் பிடித்த மலைக்காரீ—ஏனையரு

[66] மஞ்சும் பிடியே அரனோ டவைநடித்த
மஞ்ச ளழகி மகராசி—அஞ்சலிசெய்

[67] சேயெற் குபகாரீ சிந்தூர பைரவியே
காயெற் பிரகாசக் காமாட்சீ—தாயெற்கா

[68] யண்டபிண்ட மெங்கு மகண்டப் பெருவெளியாய்ச்
சண்டனின்றி நிற்குந் தருமியே—தொண்ட

[69] னுனையே நினைந்தே னுருச்செபித்தேன் வெண்ணீ
றெனையேரிட் டுப்பார்த் திங்கீந்தே—மனதுவைத்து

[70] எங்கியான் சென்றாலு மெவ்வார்த்தை சொன்னாலுந்
துங்க மனையிற் றயின்றாலும்—மங்கையர்தஞ்

[71] சேர்க்கையி னின்றாலுஞ் சிற்றுண்டி யுண்டாலும்
மூர்க்காடு சுற்றுகினு முன்னினைவே—தீர்க்கமுட

[72] னென்னுளத்து நீங்கா திருக்கவு முன்னருளே
மன்னி யெனக்குள் வளர்ந்திடவு—மன்னையைப்போ

[73] லெப்போது மென்சமுகத் தீகைமிகுந் துவந்து
முப்போதுங் காணு முறைபயிற்றி—ஒப்புவமை

[74] இல்லாத சோதி எனக்கு வெளிப்படவே
சொல்லாது சொல்லுந் துறைகாட்டி—அல்பகலோ

[75] டேத மிலாநிலையி லெண்சோதி வீசமரு
ளோதி நிலாப்பா லுணவளித்து—நாதவிந்தா

[76] லான உடல்கெடுமு னாலோசித் தென்னையறிந்
தேனை யுயிரு மெனதுயிரா—யானிருக்க

[77] வேதாந்த முத்தி விதேககை வல்யமளித்
தோதாந்த ரங்கந் துரைந்துரைப்பாய்—மாதா

[78] வெயிலார் நவகோண வீட்டி லிருக்குங்
குயிலே குலவரையின் கொம்பே—பயிலாதி
[79] யஞ்செழுத்தா யெட்டெழுத்தா யன்பத்தோ ரட்சரமா
பிஞ்செழுத்தாய் நின்ற பெருமாட்டி—வஞ்சகரைச் [யப்
(80) சூலா யுதத்தாற் றுளைத்து விளையாடும்
வேலா யுதன்போற்று மெய்த்தாயே—ஞாலமெலா
(81) மோர்கொடியிற் செய்தாங் குணவூட்டி வாட்டவல
கார்வடிவ நாகவடக் காரியே—கூர்வடிவா
(82) ளேந்தலர்கை மாட னிருநிலத்து முன்னோடு
மாந்தளிர் போன்ற வதனத்தாய்—சாந்தகுண
(83) வன்பரைத் தூசித் தபசாரஞ் செய்வோர்தஞ்
சென்னியைக் கொய்யுஞ் சிறுபெண்ணே—உன்னதமேற்
(84) பேய்த்திரளை யோட்டும் பிடாரி யிடாகினியே
காய்த்த மரத்தூருங் காப்பவளே—வாய்த்தெனது
(85) வார்த்தைக் கேளா மயானப் பசாசுகளைப்
பார்த்துப் பிடித்தடிக்கும் பாஞ்சாலீ—பூர்த்திபெறு
(86) முப்பத்து முக்கோடி தேவர் சுதிமுளங்க
அப்பன் சடையில்வைத்த அம்பாளே—செப்புமுலைக்
(87) கோமாத ராடிக் குலவையிட்டு மாலாத்தி
தாமே யெடுக்குந் தாக்காரீ—பூமாது
(88) வாணி யிசைபேச மற்றங்க ஊசலினைப்
பேணி யசைக்கும் பெரியம்மே—சேணிரதி
(89) மட்டா ரலரை மனம்போ லெடுத்திறைக்கு
மட்டாள தேசத் தரசாணீ—வட்டமதி
(90) யொத்த முகத்தா யுருள்விழிகண் மூன்றுடையாய்
பத்தரை மாத்துப்பொற் பதுமையே—மெத்தச்
(91) சிறுத்த விடையாய் திரண்டுருண்டு விம்மிப்
பறுத்த தனத்தாய் பவானி—கறுத்தறல்போற்
(92) சிவி முடித்தசடைத் தேமொழியே பாவலர்நன்
நாவி னடித்துதவு நாயகியே—பாவிகளுக்

(93) கெட்டாதி லாடத் திருந்தபயாத் தங்காட்டி
நிட்டானு பூதிதரு நீலநிறக்—கட்டழகீ

(94) ஈட்டி கதையறிவா ளெஃகு மழுவேந்தி
நாட்டியஞ் செய்யுமற நாயகியே—பாட்டருவங்

(95) துல்லாச மாக உவமிக்க நாணிமுன்னின்
றெல்லாம் நீதானென் றிறைஞ்சம்மா—கல்லா

(96) விடருங் கவிபாடு வித்துவா னுக்குங்
கடறிக் கருள்கொ ழிக்குங் கண்ணீ—மடலவிழ்ந்த

(97) முல்லை யிருவாச்சி முண்டகஞ் செவ்வாளி
மல்லிகை ரோஜா மகிழாத்தி—வில்வமரு

(98) கந்திமந் தாரை யலர்ந்த பவளமல்லி
கந்தமனோ ரஞ்சிதங் கடுக்கை—சிந்துபன்னீர்

(99) தும்பைப்பூ மாம்பூ துளிர்நொச்சி பச்சறுகு
செம்பருத்தி செவ்வந்தி செண்பகப்பூ—வம்பச்சை

(100) நந்தியா வட்டை நனைந்த மரிக்கொழுந்தும்
பந்திபந்தி யாகப் பறப்பணைமேற்—சந்தமணித்

(101) தண்டை புலம்பத் தனியே நடந்துவரு
மண்டலங் காணு மணிமார்பீ—தண்டாளா

(102) மேரே மாகதமே மெஞ்ஞான மோனமணித்
தாரே தவத்தோர்க டந்தாயே—சீரேசு

(103) தொண்டரொடு கூடுஞ் சுராலயப் பைங்கிளியே
கண்டவர்க ளீங்காக் கதிக்கரும்பே—பண்டையரன்

(104) சென்னியில் வைக்குஞ் சிறப்பார் குதலைமொழிக்
கன்னிகையே ஞானக் கனிமயிலே—தன்னியமுன்

(105) மூன்று யிருந்தவளே முப்புரத்தைச் செற்றவளே
ஆன்றோர்க் கருளு மபிரோதி—ஈன்றெடுத்த

(106) தாய்தமருந் தானுந் தயாபரிசர் வேஸ்வரியே
வாய்திறந் தேபேசு வாணுதலே—நோயணுகா

(107) துன்மகனு மெற்கு னூரந்தந் தினிப்பிறவாச்
சின்மயா தீதச் சிவத்தோடே—தன்மயமாய்

(108) வாழ வரமளித்து மல்லலுறக் காப்பாற்றி
யூழனுகா தாள்வது முன்கடனே—வாழைகழை

(109) தென்னை பலாகமுகு சீத்தா விளாமருதால்
புன்னை மருதகில்மா பூங்கடுக்கை—இன்னு

(110) மனந்த வனங்க ளழகான புட்ப
வனங்க ளெருங்கி மழைச்செய்மீ—தனங்கன்ற

(111) னப்பான பூமீ தனங்க டினங்காண
அம்பார் தடாக மரன் மனையா—ரம்பாரி

(112) மாட தடவீடு மடஞ்சா வடிகோயில்
கூடங் கலாசாலை கோபுரங்க—ணீடு

[113] வளருந் திருவிருக்கு வானிதென்று தேவர்
கிளரும் பெரும்பேறு கிட்டி—வளஞ்சேர்

[114] சிறுவயலா மிக்க சிறந்த மகாநாட்டிற்
பெறுதற் கரிதிலதாய்ப் பேசு—நறுநறவேய்

[115] சொல்லா யுனக்காமித் தோத்திரத்தை நாடோறுஞ்
சொல்லா நிற்பார்க்குன் றுணைச்செய்தே—கல்வியருள்

(116) மென்மேலு மீந்து மிகைதீர் துண்வாடை
பொன்மேலுந் தந்தே புணைக்கொள்வா—யென்னாளும்

(117) கண்மணிபோ னிற்குங் கருணாகடாட்சி யருட்
பெண்மணியே போற்றி பெருகுதவப்—பண்போர்

(118) கிரணம் புயம்போற் கிளைத்தெழுந்த நின்றன்
சரணஞ் சரணஞ் சரண்.

---

அரண்மனை சிறுவயல்

## கருணா கடாட்சி யம்மன்

அகவல்

பங்கயத் திருவே பரமேச் சுரியே
சிங்கா தனத்தின் செழுமணி விளக்கே
செங்கண்மா றங்கை தேவி காமாட்சி

எங்களை யாளு மிமயா சலத்தாய்
பச்சைக் கொடியே பரமசுல் யாணி
முச்சுட ருச்சி முளைத்தெழுஞ் சோதி
இச்சக மெல்லா மீடேறு மாறி
ரட்சித் தருளி ராசேச் சுரியே
விட்சேப மில்லா விறனெஞ் சடியார்
பட்ச மிகுந்த பணபூ ஷணியே
கோலா கலமாய்க் குலவுங் குயிலே
வாலை வராகி மனோன்மணித் தாயே
தன்னை யறிந்தோர் சமூகத் திருக்கு
மன்னைக்கு மிக்க அமைவுற் றவளே
முன்னை வினையை முதலறக் காய்ந்தா
யென்னைப் படைத்தா யிவ்வுல கத்தே
பொன்னந் தனத்திற் புனைபணி யாா
மின்ன நடந்து விளையா டனமே
உன்னத மேரி லுதித்த சமர்த்தியே
கன்னங் கருத்த கௌரி மீனாட்சி
மாயைப் பசாசை மடித்திடர்ப் பேய்கள்
வாயைப் பிழந்து வருங்கெதறி காளீ
மடப் பாதகத்தர் வரச்செய் சூாளியைக்
கடப்பாரை கொண்டு கடுந்தடிப் பவளே
கலகஞ்செ யேவற் கணம் பறந்தோட
உலக்கையிட் டெற்று முக்கிர வீரீ
பில்லி சூனியஞ் செய்வினை தொட்டியம்
சல்லியங் கெட்டுத் தவிடுபட் டோட
பல்லைக் கடித்துப் பறித்தெறிப் பவளே
அடங்கா மிருக மனைத்து மொடுங்கி
நடுங்க நடிக்கு நாரா யணியே
ஒவ்விடத் தன்பர்க் குளமஞ் சாம
லெவ்விடச் செந்து மிருகா தகற்று
நீலி வாராகி நிமலியம் பாலிகா
வாலிப கோல மயானப் பிடாரி

வஞ்சக நெஞ்சில் வளராப் பொருளே
விஞ்சையர் நெஞ்சில் விளங்கும் பிராட்டி
தஞ்சமென் றடைவார் சந்ததி முழுது
மஞ்சே லென்று ளமுதக் கடலே
நாலா யிரத்து நானூற்று நாற்பதாந்
தூலவென் னோயைத் தூலத்தருள் பவளே
ஏமன் றுயரை எரித்திடு பவளே
காமன் றுயரைக் கரித்திடு பவளே
எல்லாப் பவிசு மிலக்குமி விள்ளவுஞ்
சொல்லாக் கவியைச் சரஸ்வதி சொல்லவும்
பல்லக்கி லேறிப் பவனிவந் திடுவாய்
பல்லக் கணிந்த பயங்கா ரூபியே
ஏழை யடியே னிருவிழி காண
மாழைச் சிலம்பு வகைவகை யார்ப்ப
நீளந் துகிலு நிலவொளி பரப்பித்
தாளம் புயமேற் றழுவமைக் கூந்த
லூச லாட உருள்விழி சுழல
வாசநற் கொன்றை மலர்த்தொடை புனைந்து
மூக்குத்தி பூடி முருகுகற் றோடு
பூக்கொப் பிலங்கு புல்லாக் கிரண
கைக்கட யந்தொடி காப்பொளி விடவே
மைக்கட் புருவ மையந் திலதமிட்
டிடையி லொட்டியாண மிரவிபோன் மின்னச்
சடைப்பணி வில்லை தளதள வெனவே
பதைக்க மட்டியல் பவளக் கோவை
துதைக்கு மோகன மாலை துலங்க
அகில்சந் தனம்புழு கனைந்த களபம்
குமுகுமு வெனவே குளிர்ந்தசு கந்த
மமுதக் கடல்முத லண்டங்க ளெல்லாம்
பரவிக் கமழப் பரமசந் தோடமா
யிரவும் பகலு மெனையொரு பிள்ளைபோன்
றெண்ணி யணைத்தெ னிதயங் குளிர

வண்ணத் தனத்தின் மதிப்பால் கொடுத்து
ஞாபக சக்தியை நன்றாய்ப் புகட்டிக்
கோபத்தை நீக்குங் குருமொழி காட்டிப்
பாவத்தை நீக்கியென் பட்சத் திருந்தே
ஆபத் தணுகா தருண்மழை பொழிந்து
வாக்கு மனமுமில் வாசா மகோசர
சாக்ர சுழுத்தித் தலத்தி லழைத்தே
என்னையு முன்னே டிரண்டறச் சேர்த்துத்
தன்னிலைகாட்டித் தயைகூர்ந் தருளக்
கோடி சூரியன் கூசருள் வெளிமீ
தோடி வருக வொருகணத் தெதிரே
மங்கள வல்லி மதுரைமீ னாட்சி
துங்கக் குயிலே சுராலய மயிலே
ஆனைக் காவா ழயிலாண் டேச்சுரீ
ஆனபி ரான்மலை யாளமு தேச்சுரீ
மயிலாச லத்தில் வளருஞ் சிலையே
செயசெய ஞானத் திருவடி போற்றி
அத்தனை முப்பத்து முக்கோடி தேவரும்
சித்தரும் வந்து திணைந்தின மேற்றுஞ்
சீருந் தவமுஞ் சிறந்து வளர்ந்து
பாரும் புகழப் பலசித் திரஞ்சே
ரரன்மனை சிறுவய லாகிய நாட்டி
லரன் மும்முடியா ரன்பான் மணந்த
பைங்கிளி போல்வாய் பாதம் பணிந்தேன்
இங்குவந் தருளு மிவ்வக வற்பா
சொல்லடி யார்தந் துயர்வினை நோய்தீர்ந்
தெல்லா நன்மையு மீதலுன் பாரமென்
றேற்றி யேற்றி யிரஞ்சுது னருளே
போற்றி போற்றி புவனஞ் செழிக்கவே
அருணா சலத்து மமர்ந்த
கருணா கடாட்சியென் கண்மணி யுமையே.

---

அரன்மனை சிறுவயல்

## கருணகடாட்சி அம்மன் பதிகம்.

சங்குதுந் துமிதிமிலை கொம்புகிடி பிடிவீணை
சல்லரி பியாண்டு வாங்கா
சலதரங் கங்கிடந் தவில்கஞ்ச ராபம்பை
தம்புருமிரு தங்க மாவேய்
தங்கமணி சேகண்டி கிங்கியெண் பறைமுழவு
சத்தாழி போன் முழங்க
சந்திர னிராகுகுரு புதனரிசெவ் வாய்சுக்ரர்
சனிகேது வேண்டி நிற்க
நங்கைசசி யூராரும் நவகோடி சித்தரிஷி
நாற்பத்தெண் ணயி ரவரும்
நாற்றிக்கு செவிடுபட அரகரா வென்றேத
நாரணன் பிரமன் வாழ்த்த
கங்கிலா திலகிடக் கால்மாறி யாடெந்தை
கண்போன்ற பட்ச மயிலே
கருதிமும் முடியெந்தை மருவுசிறு வயல்வந்த
கருண கடாட்சி யுமையே. (1)

மட்டவிழ் பதாரமுங் தண்டைவெண் டையமுங்கல்
வளையலை யணிந்த கையும்
வைரமணி யட்டியல் பதைக்கமோ கனமாலை
மலர்மாலை யிட்ட களமும்
ஒட்டியா ணங்கடய முயர்நாக ரத்தின
முடைத்திழைத் திட்ட தோடும்
ஒளிருபொற் சுட்டியு மலர்ச்சடைப் பில்லையு
மொரேகன்மூக் குத்தி முருகும்
மெட்டிகளை யாழிநவ மணிகொண்ட புல்லாக்கு
விலைமதிக் காக்ரீ டமும்
விதவிதச் சுடர்வீச வெண்டுகி லணிந்துமேல்
விளைவுற்ற பச்சை வடிவாய்

கட்டழ குடன்செய்ய தாமரையி னிற்கின்ற
 கண்ணே யெனக் கருளுவாய்
கருதிமும் முடியெந்தை மருவுசிறு வயல்வந்த
 கருணை கடாட்சி யுமையே. (2)

அட்டதிக் குங்குளி ரலங்கார வாவணத்
 தங்கதலி கமுகு நட்டு
அழகான தோரணந் தொங்கவிட் டதிலிந்த்ர
 னரசாங்க மண்டபம் போற்
றிட்டமிட் டகில்புனுகு மெழுகிநற் பன்னீர்
 தெளித்தலர்ப் பாய் விரித்து
சிங்கார சிற்பரத் தினஊச றாக்கியே
 செம்பஞ்சு மெத்தை பேணி
முட்டிலா திரவிசந் திரனிற்க நடனபன்
 மோகபைந் தொடிகள் சூழ
மொகுமொகென வேதகீ தத்தோடு பொன்வாணி
 முன்கண் டழைக் கவந்தே
கட்டமற வடியார்மு னூசலா டன்னையே
 காணிழலி லென்னை யாள்வாய்
கருதிமும் முடியெந்தை மருவுசிறு வயல்வந்த
 கருணை கடாட்சி யுமையே. (3)

நீருண்ட கொண்டனிற நெய்ச்சிரை ததும்பவெண்
 நிலவுண்ட நெற்றி யொளிர
நித்திலப் புன்முரல் பவளவாய்த் தேனொழுக
 நீலாஞ் சனத்தை யுண்டு
வாருண்ட கொம்மையிரு குழையினுங் கயல்போல
 மருவுகண் புருவ நோக்க
மல்லநவ மணிமாலை மலர்மாலை கவிமாலை
 மார்பிற் புரண்டு மின்ன
பாருண்ட மாற்கிளைய தங்கைச்சி யிவளெனப்
 பாதச் சிலம்பு பாட

பழகன்ன மன்னமட வார்கோடி சூழஓர்
பல்லக்கை விட்டி ரங்கி
காருண்ட வினைதீர நீறளித் தென்மீது
கருணைகூர்ந் தருள வருக
கருதிமும் முடியெந்தை மருவுசிறு வயல்வந்த
கருணை கடாட்சி யுமையே. (4)

அட்டாங்க யோகமு மனேகநற் சித்தியு
மடங்காத வின்ப வாழ்வும்
அறிவறியு மாற்றலு மறத்தார் சினேகமு
மருட்கவிஞ ரென்ற பேரும்
எட்டா தெனக்கலைக ளோலமிடு மெஞ்ஞான
ஏகாந்த முத்தி வீடும்
இரவிமதி யுடுபடல மெல்லாங் கடந்திலகு
மெண்சோதி வீசு னருளும்
வெட்டாத சக்கர மியம்பாத மந்திரம்
விளைந்த ஓங்கார நிலையும்
வெளியொளிவு ளொளியிலே விரவரிய சத்தியும்
விராட்டு வடிவாங் கோலமும்
கட்டாக வோதிவைத் தென்னையாட் கொள்வதுன்
கடனது நடனர் மயிலே
கருதிமும் முடியெந்தை மருவுசிறு வயல்வந்த
கருணை கடாட்சி யுமையே. (5)

பொல்லாது செய்யுமென் வினைதனக் கழுவனோ
பொருடேடு தற்கழு வனோ
பூவையர்க் கழுவனோ நோய்தனக் கழுவனோ
புத்ரோர்ப் பத்திக்கழு வனோ
கல்லாத யென்கொடிய கருவிகட் கழுவனோ
காமவா தைக்கழு வனோ
காலனை நினைத்தழுவ னோகைபார்த் துய்யுமிக்
கஷ்டத்தை நொந் தழுவனோ

மல்லா டிடும்பைகூர் வயிறினுக் கழுவனோ
மந்த புத்திக் கழுவனோ
மாவாடு முன்பாத பூவோ டீரோதோடு
வஞ்ச நெஞ்சிற் கழுவனோ
கல்வியருள் பயிலுன்னை நம்பியா னோதலுங்
கருணைக்கு யழகாகுமோ
கருதிமும் முடியெந்தை மருவுசிறு வயல்வந்த
கருணா கடாட்சி யுமையே. (6)

மதபேத மேபேசு பாவியோர் நாளுமுன்
வலிமை தெரியாத பாவி
வஞ்சகங் குடிகொண்ட பாவிஎளி யோர்மீது
மனதிரங் காத பாவி
கொதிபாவி நல்லவர்க் குதவாத பாவிவெங்
கொலைமறுக் காத பாவி
கொடிதான பாவியரு ளடையாத பாவிசற்
குருமொழி கொளாத பாவி
இதாமின் னாரெலாந் தாயென்று நினையாம
லிச்சித் துழன்ற பாவி
இன்பமே துன்பமாய்த் துன்பமே யின்பமா
யெண்ணித் திரிந்த பாவி
கதிகாண வறிவிலாப் பாவியான் றெழுதழுங்
கவலைதீர்த் தருளு மம்மா
கருதிமும் முடியெந்தை மருவுசிறு வயல்வந்த
கருணா கடாட்சி யுமையே. (7)

உலகெலாம் புகழ்வேத உச்சிமுச் சுடர்மீது
ளொளிகண் டுறங்க வேண்டும்
உயர்ஞான மணிவேண்டு முன்னோடு யான்கூடு
முத்தர வளிக்க வேண்டும்
அலகிலா நினதன்பர் நேயமே வேண்டும்நெஞ்
சலையா திருக்க வேண்டும்

அன்னதா னஞ்ஜீவ காருண்ய மோங்குமா
றனோவோர்க்கு மோத வேண்டும்
இலவுகாத் திட்டகிளி யாகாது புளியோடு
மென்னநான் வாழ வேண்டும்
எப்போது முன்கிருபை வேண்டுமுன் னருளினு
லிருவினை யறுக்க வேண்டும்
கலகமிடு குப்பைமல வாழ்வைநம் பாமையுங்
கண்ணு லழைத் தருளுவாய்
கருதிமும் முடியெந்தை மருவுசிறு வயல்வந்த
கருணு கடாட்சி யுமையே. (8)

நிட்டைவிட் டுலகத்து நிதிதேட நினைவுற்று
நேரிசைக் கவிகள் பாடி
நெறிதவறி யொருவர்பின் ருெடாமன மொவ்வாவென்
நிலைமைநீ யறியா ததோ
மொட்டையிட் டில்விலகி நிற்கவோ விக்கால
முறையன்று பழிசு மத்தும்
மோனியா யோரிடத் துட்கார்ந்து மூணின்றி
மோட்சத் தடங்கி னன்ரும்
மட்டலர்க் குழலியோ டில்வாழ்வ தேற்பந்த
வலைக்கஞ்சு தெந்த னெஞ்சம்
மட்டுப் படாதுளந் தாமரையி னீர்போன்று
மலையாம லோடி வந்து
கட்டுப் படாதினிப் பிறவா திருக்கவழி
காட்டிக் கொடுத் தருளுவாய்
கருதிமும் முடியெந்தை மருவுசிறு வயல்வந்த
கருணு கடாட்சி யுமையே. (9)

பேணுத யென்னையும் பிள்ளையென் றெண்ணியோர்
பேச்சிட் டழைத் திருத்தி
பிஞ்ஞக நடாலயங் காட்டியென் பேரில்நற்
பிரியமுற் றமுத மூட்டி

நாணு மனத்தையுன் ஞானுக்னி யாற்சுட்டு
நான்சொற்றல் கேட்க வைத்து
நனவுகன வெஞ்ஞான்று மாதரித் தேமன்வேல
நலியா தருட்க வசமே
பூணு யளித்திகம் பொய்த்தறிவை யறியுமோர்
பூரணு னந்தவடி வாய்
புன்மையிற் றன்மயவி தேகமோட் சார்த்தம்
புரிந்தருள் கவிப்பாத் திறன்
காணன்பர் வேண்டுவ தளிக்குமே காட்சரீ
கணபதி வணங்கு தாயே
கருதிமும் முடியெந்தை மருவுசிறு வயல்வந்த
கருணு கடாட்சி யுமையே. (10)

---

## கருணுகடாட்சி அம்மன் வெண்பா மாலை.

### காப்பு.

மன்னுஞ் சிறுவயல்வாழ் மாதேவ மும்முடியார்
கன்னி கருணு கடாட்சிக்கு—என்ணு
வியம்புபா மாலைக் கிகமுள்ள மட்டும்
சுயம்புவிக்கி னேசன் றுணை.

---

கண்டதுண்டோ நீவிர் கலையுடுத்து முத்தணிந்து
விண்டதுண்ட பச்சை வெயில்வீச—வண்டந்
தெருணுக மும்முடியான் செய்யிடத்தே நிற்குங்
கருணு கடாட்சக் கரும்பு. (1)

ஆக்கஞ் சுகந்திருவன் பானந்த முத்தியுமே
நோக்குஞ் சிறுவயலி னுண்ணறிஞோர்—கோர்க்குநூல்
கற்றவர்க ளேற்றுங் கருணுக டாட்சிபதம்
பெற்றவர்க டாம்பெற்ற பேறு. (2)

கந்தரத்த ரோதுங் கருணைக டாட்சியின்றன்
சுந்தரத்தை யென்னென்று சொல்லுகேன்—அந்தரத்த
ரின்னிசைகள் பாட விரதிபொன் வாணிநிற்பப்
பொன்னூச லாடுகின்ற போது. (3)

கற்றபடி நிற்காக் கடையர் நடைபழகா
துற்றபடிப் போதுப தேசஞ்—சொற்றுளும்
கன்னியர்கள் சூழக் கருணை கடாட்சியென்பேர்
மன்னிய மும்முடி-யார் மாது. (4)

கார்போன்ற கேசக் கருணைக டாட்சியென்றே
ஓர்போ துரைப்பா ருயிர் பிழைப்பார்—சீர்தா
டெரிந்தா ரருள்படைப்பர் தேவி யவளைக்க
மிருந்தார் சிவமா வரோ. (5)

அருணை சலத்திருந்தே னன்புருவாய் வந்த
கருணை கடாட்சிதனைக் கண்டா—லிருணைகங்
கல்லாமை யுள்ளக் கலக்கங் கலிபேய்நோய்
சொல்லாம லோடுமே தூர. (6)

கம்மை நிறக்கூந்தல் கருணை கடாட்சியளா
மம்மை யுளத்திருப்ப ளாதாவிற்—கிம்மை
மருமையினு மஞ்சி மலையே மெதிர்க்கி
னெருமையர்க்கு யாமா மெமன். (7)

கோவின்றித் தள்ளாடிக் கூனிக் குருடுபட்டு
மேலூன் றளர்ந்து விடுமன்னு—னூலாரக்
கன்ன புரத்தாய் கருணை கடாட்சி யம்மே
என்னுயிரைக் காத்தருளவை யே. (8)

கண்டேன் றளியுட் கனகக் கொடிமாமுன்
பெண்டோளர் பாகத் திருந்தபடி—கொண்டபச்சைக்
கண்ணாடி போல்வாள் கருணை கடாட்சியெனைக்
கண்ணா லழைக்க கனு. (9)

செய்மா வினையனந்தஞ் செய்தாலுந் தஞ்சமென்று
னுய்யார சீதாட் குளங்கொண்டேன்—மெய்யாக
கற்பனைக்கு மெட்டா கருணை கடாட்சியருட்
கற்பகமே நோக்குகடைக் கண். (10)

---

௨

## பராசத்தி மாலை.

ஓரெழுத்தாய் மூவெழுத்தா யொப்பிலா வஞ்செழுத்தா
யாறெழுத்தா யெட்டெழுத்தா யன்பத்து—ஓரெழுத்தாய்
பத்தர் பணியும் பராசத்தி மாலைதனக்
கத்திமுக வித்தகன்காப் பாம்

(1) அரச வனத்துவா னனனன்னையாமி னன்னமன்ன
பிரச மலர்க்கொடி பேர்வார்தனப்பிடி பிஞ்ஞகன்றன்
சரச மணச்சிகி சங்கார மாலினி தண்மதுரை
யாச னளித்த பராசத்தி நாளு மருந்துணையே

(2) வேட்டிய பத்த ரகவீட்டி லாடத்தர் வீற்றிருக்கும்
பூட்டிய பொற்பணி மேலாள் வராகிப் புராதனிகை
நாட்டிய தங்கர கங்கபா லங்கன குகரவா
ளீட்டி துப்பாக்கி கட்டாரி கோடாலி யிரண்டயிலே

(3) நட்டுவா ளெட்டுத் திசைகீழு மேலு நடுவுமொன்று
மிட்டுவாழ் நிட்டை யடியார் முடிசூ டிணையடிப்பூ
மட்டுவார் கூந்தற் பவானி யன்பிற்றீ மனிதர்கையைக்
கட்டுவா டிட்டுவாள் முட்டுவாள் வெட்டுவாள் கட்கமிட்டே

(4) எதைப்பார்க் கினுமவ டோற்றங் கெடாதார்க் கிடர்விளைப்போர்
பதைப்பாக வன்னை பராசத்தி வந்தொரு பாய்ச்சலிலிற்
சதைப்பாள் விதைப்பாள் குதிப்பா ளவர்க டனுஓடிய
உதைப்பாள் வதைப்பாள் சிதைப்பாள் புதைப்பா ளுடன்
[மண்ணிலே.

(5) உரிப்பா ரரிமீ திருப்பார் பிரான்களி னூழியத்தார்
வெரிப்பாகப் பேசி வெடுவெடுப் போரின் விழிபிடுங்கித்
தரிப்பாள் வராகியை நிந்திப்பர் வீடு தவிடுபட
எரிப்பாள் கரிப்பாள் பொரிப்பாள் சிரிப்பா ளிடரிவிட்டே

(6) பொல்லாத பேரையு மெல்லார பாதப் புணைபடுநெஞ்
சில்லாத பேரையு நல்லோரை நிந்தி இழிஞரையும்
நில்லாது கொல்வது மல்லான வன்பர் நினைத்தபொரு
ளெல்லா முமீவது முல்லாச வாலைக் கிசைதொழிலே

(7) தொண்டகந் தட்டை கிணைதூ ரியந்துடி தோன்முரசு
திண்டிநந் தாகுளி யம்பம்பை மேளந் திரத்தொலிசே
கண்டி கண்டாமணி கொம்போசை பொங்கக் கனிந்துநடங்
கொண்ட சண்டப்பிர சண்டாயி எங்கள் குலதெய்வமே

(8) புல்லை முடிந்தகங் காடோய் சடாடவிப் பூரணரெட்
டெல்லை முடிந்த மெய்ப் பாப்பாவை நாத ரிளவிரன்மேற்
கல்லை முடிந்தவர் தேவர்கொண் டாடிற் கற்கேன்பெருமை
சொல்ல முடிந்தது வோமல்ல வாலைச் சுமங்கிலிக்கே.

(9) சேய்க ளிட்டப்படி யேசத் தூருகள் சிரந்திருகி
வாய்க ளிட்டப்படி சுண்டூ னிரத்தசெம் மாமிசத்தை
நாய்களெட்டிக்கடித் துப்போர் புரிந்திட நாறவைத்து
பேய்களெட்டிப்பிடிக் கத்தூக்கு வாளப் பிரேதத்தையே

(10) தொந்துசிந் தன்பரைத் தூசிக்குந் துட்டர் துடிதுடித்து
விந்துவிந் தாய்க்கொட்டி மெய்சோர மோகினி விட்டுழக்கி
நொந்துவெந் தானபின் கோபித்து வாயி னுரைபிதிரச்
சந்துசந் தாய்வகுந் தெறிவாள் பிடாரியஞ் சாமுண்டியே

(11) எண்ணீர வன்பர்தங் கண்ணீர் கலங்க விடர்புரிவோர்
தண்ணீரு போற்களி யக்கர் கடாகி தனையனுப்பி
மண்ணீரு போன்மடித் துச்சுடு காட்டுள் வருபிணத்தை
வெண்ணீறு பண்ணுவள் முன்னூ றெருவிலோர் வீரியுமே.

(12) ஆமுண்டி வாதைக் கடியார்க் குபசரித் தன்னமிடா
தேமுண்டி வாழ்பழிச் சண்டாளர் கொண்டயிற் றீப்பிடிக்க
மாமுண்டி யார்மலர்க் காறாக்கிநெஞ்சை வகுந்ததிருஞ்
சாமுண்டி சூலமுண்டே துணைக் கேதினிச் சங்கடமே.

(13) பாத்திற் பொருத்துமுன் பாதாம்புயத்தே பலமலரென்
காத்திற் குவித்தருச் சித்தேத்தி நித்திய கன்மமுடித்
தூத்திற் றூரத்தலற் றுன்பாடல் பாடுமெனூழ் வினையைத்
தூத்திக் கருத்தி னிற்பாய் சூலபாணித் துரைமகளே.

(14) காமனை யேமனைக் கன்மத்தை நோயைக் கணங் குறளைப்
பூமனை யார்காஞ் செய்யும் பிறப்பைப் புலனிருட்டை
பாமழை பெய்தழித் தானந்த நித்திரை பண்ணவைக்குஞ்
சாமள ரூபி யென்னுத்தாள் கொடுத்திட்ட தைரியமே.

(15)என்னஞ்சு பூதமு மொன்றாய்க் குவிந்திருந் தேற்றுமங்கார்
மின்னஞ்சு சோதியுண் முன்னஞ்சை யுண்டவர் மோகமங்கை
பொன்னஞ் சுரமட வார்மாமையெல்லாம் பொலிந்திலங்குஞ்
சின்னஞ் சிறியபெண் போல்வந் துலாவத் தெரிந்தனனே.

(16) பெறுந்தகை யன்பர்முன் பேராசைதீரப் பிரசன்னமாய்
நறுந்துறை யிந்தகப் போதே குடிகொண்டு ஞானமுறை
குறுந்திரு மூரற் குமரியம் மாவிக் குவலயத்தி
லறிந்தறி யாதடி யேன்செய்த குற்ற மகற்றுவயே.

(17) வெப்பாணி நேர்வடி வப்பாணி வேணியர் மெய்யகலாச்
செப்பான பார பயோதக் காளிவிண் டேவர்சுற்றச்
சப்பாணி மாடனுஞ் சாத்தனு மாடச் சலசலென்று
சப்பாணி கொட்டி விளையாடுவாள் பிணச் சாம்பலிலே.

(18) தண்டாடுதிக்கும் புவனேசை யன்பர் தமையெதிர்ப்போ
ருண்டா யினுக்கிர மாடனைக் கூப்பிட் டுரைத்தவனைக்[திறைற்
கொண்டா வென்றேவி வருமுன் பொறுக்கொணுக் கோபத்
றண்டா யுதங்கொண் டடிப்பாள் குவடுந் தவிடெழவே.

(19) பேச்சி யிசக்கி விசாலாட்சி காளி பிடாரி துர்க்கை
நாச்சி யிராக்குமை மீனாட்சி நாரணி நஞ்சையுண்டா
டாச்சி பவானி வராகி மனோன்மணிக் கன்புகொண்ட
பாச்செபி யன்பருக் கென்னாளு மில்லை பயங்கரமே.

(20) மறைச்சியும் போற்றுவச் ராகாரி காளி மரகதம்போ
ணிறச்சிலை நீலி நிலாநேர் முகத்தி வெண்ணீறணிசேண்
பறைச்சி பவானிதன் பத்தரை நிந்திக்கும் பாதகரென்
பிறைச்சியை நச்சுப் பசாசு கட்கள்ளி யெறிகுவளே.

(21) கண்டைப் பழித்தசொற் காமாட்சி யம்மை கற்காரெனினுந்
தொண்டைப் பிடித்தவ ரேனுலு வேதமுஞ் சொல்லிலைவப்பா
மிண்டைப் பழித்தி டவரோடு சண்டை விளைப்பவரைச் [ள்
சிண்டைப் பிடித்தடிப் பாள்மண்டை யோடுஞ் சிதறிடவே.

(22) புட்டத்தலரும் புகழ்பாத மாலினி போக்றிகளிற்
குட்டப் புழுதிசெய் தாமணக் கூன்றிக் குருக்கிட்டவர்
மட்டிக் குணமற வாள்வீசி வெட்டி யவயவத்தோல்
சுட்டுச் சரட்டிலிட் டேகட்டு வாள்கறித் தோரணமே.

(23) கடுங்கற் குணமிரு கங்கோடி கூடினுங் காணடியார்க்
கொடுங்கிக் கிடக்கி னுவகைசெய் வாளெதிர்த் தோடிவந்தா
னடுங்கிக் கிரங்க நசுக்கிக் குடலை நரம்பையெல்லாம்
பிடுங்கிக் குலவை யிடுவாள் பிடாரிப் பிரபலியே.

(24) வாசப் படுபத வாலையை வந்தி மகான்களைக்கோ
ளேசப் படுபவ ரேழா நரகத் தெரிபடுவார்
தோசப் படுவரங் கிங்கோடி நாயன சோறுமின்றி
நாசப் படுவரந் தோவந்த யேமன் நடாத்தநொந்தே.

(25) அடியா ருரைத்த மொழியே மதியா தசட்டைசெய்யும்
படிறுன பூத மிருடிப் பசாசு பதைபதைக்கத்
தடியா லடித்துப் பொடியாக நெற்றித் தழல்விழியாற்
கடிதா யெரித்து வருவாள் வராகியென் கண்மணியே,

(26) தாய்போ னினைத்து மதவாதை நீக்கித் தனியிடத்திற்
சேய்போ லிருந்து பயபக்தியாகத் தியானமிட்டாற்
காய்மா புலியரி மாமூரி யெண்குமுன் காவல்கொண்டு [யே
நாய்போற் கிடக்குமென்பா ளென்னை யாளொரு நாரணி

(27) இட்ட மிருந் தகலாதென்ன துன்புவந் தேற்படினுஞ்
சிட்ட வாந்தை விடாதோது மன்பர் திரமறிந்தோம்
வட்ட மிருந்தரு ளம்பாள் வராகி வருமை வந்தாற்
கிட்ட யிருந்தெடுத் தீவாள் புதையற் கிடாரங்களே.

(28) அன்னம் புரிக்குல மாரால வாயி லருள்படைத்தே
பொன்னன் புறுமலர்ப் பூங்கொடியேபதம் போற்றிசெய்து
உன்னன் புறுமெனை யாட்கொள்ளு மாறென் றுறைத்தருள
இன்னம் பாராமுக மென்னே யெனன்னே எழுந்தருளே.

29) அழகிற் கொருவ ரிணையற்ற தாயா ரருட்பதத்தைப்
பழகிப் பழகியென் னெஞ்சாரப்பாடிப் பராசத்தியென்
றிழகித் தியானித் தவள்வடி வேபெற் றிருப்பவிங்ஙன்
பழவினை விட்டது பாவங்கள் பஞ்சாய்ப் பறந்ததுவே.

(30) முத்தியின் றேட்ட மடியார் சினேகம் நன்முத்தமிழ்தேர்
புத்தியின் பீகைசௌ பாக்கியமெல்லாப் புகழுமுண்டா
மத்தியின் றோலை யணிந்தாடு மண்ண லகங்கொள்பரா
சத்தியின் மாலையைப் பாரா யமணஞ்செய் தவசிகட்கே.

---

உ

## பனையூர் தக்ஷணாமூர்த்தி பன்மணி மாலை.

காப்பு,

தானிய மாபனையூர்ச் சங்கரநா ராயணன்
மோனியருள் தச்சணாமூர்த்தியெனும்—ஞானகுரு
நம்பிக்கையானே நனிவைத் துரைகவிக்குத்
தும்பிக்கையானே துணை.

### வெண்பா.

அம்பலவாணன்பொன் றடியேனை யாள வந்த
கும்பமுனி மெச்சுங் குருநாதன்—அம்பனையூர்த்
தச்சணா மூர்த்தி தயவுடைமி னன்பர்களே
எச்சமயத் தும்பயமே யில்லை. (1)

### கலித்துறை.

இல்லாத துண்டென் றிருப்பதை யில்லென் றிடும்புகொண்டு
மல்லாடு கின்ற மனிதர்தம் பாற்சென்று வாடிநிற்கா
தல்லார் பொழிற்பனை யூர்வாழுமண்ண லடிமலர்க்கோர்
சொல்லாற் றொழுமட நெஞ்சே உனக்குச் சுகமுண்டுமே. (2)

### கலிவிருத்தம்.

உண்டுறங்கி யுடுத்திள மாதரைக்
கண்டு கூடிக் கருத்தழி யாமலே
சண்டனார் வந்து தாக்குமு னேக்குக
தண்டைசூழ் பதத் தச்சணா மூர்த்தியே. (3)

### கொச்சகம்.

மூர்த்தி தலந்தீர்த்த முறையாகக் கொண்டனுட்டித்
தார்த்த பதத்தை யகத்தே பதித்திருந்தால்
சீர்த்தி மிகுஞானச் சிவசோதி வீசநிற்பார்
பார்த்த யிடமெங்கும் பனையூர்க் குருபரனே. (4)

### எழுசீர்.

பரம்பரை முதலாய்ப் படிபடைத் தளித்துப்
பாழ்த்தெழுந் தெங்குமோ ரொளிவாய்
வரம்புரி சதுர்வே தாகமாதி களாய்
மானிடர் நரகர்வா னோராய்
தரந்தெரிந் திணங்கி யேழையேன் பிறவிச்
சமுத்திரத் துயர்கெடுத் தாளப்
பரம்பொருள் வடிவாய் வரும்பனை யூர்வாழ்
தச்சணா மூர்த்தியைப் பணிவாம். (5)






விருத்தம்.

பணிந்தன னுனையே நண்ணிப் பதப்புணைக் கடிமையாகித்
துணிந்தன னுனதானந்தத் தொட்டிலிற் சுகமாய்த் தூங்கித்
தணிந்தன னிருநோய்த் துன்பந் தமியனேன் றமிழ்ப்பூமாலை
அணிந்தருள் கொழிக்கா நிற்கு மழிவிலாப் பனையூரானே. (6)

வேறு.

பத்தி மிகும் பனையூர் பதியடைந்தே
பழுதிலாமலே பாடிப் பணிந்தால்
முத்திதருந் தட்சணா மூர்த்தி யெனவே
முழுதுஞ் சிறகை விரித்தாடு மயிலே. (7)

வேறு

மயிலே யனமங் கையர்செங்க யனேக்
கயிலே விசைபா சைவிடா துமதன்
ஜெயிலே புகுதீ தறஜ் ஞகவான்
பயிலோர் பனையூர் வளரும் பரனே. (8)

வேறு

பரதார மோகத் தலையாதே
பலர்பால் விரோதித் துலையாதே
கருமானு சாரத் துழலாதே
கவிபாடு மாறெற் கருள்வாயே
சரசோதி வாசத் திருவாயா
சருவேசுராசற் குருநாதா
பரமாதி தோதிப் பெருவாழ்வே
பனையூரில் வாழும் பெரியோனே. (9)

வேறு

பெரியதாய்ச் சிறியதாய்ப் பேசமுடி யாததாய்ப்
பிரமாண்ட கோடியாகி
பெண்ணுமா யாணுமா யலியாய்க் கணங்களாய்ப்
பேதமாய்ப் பேத மிலதா

யெரியப்பு வாயுமண் ணுகாய மாகியிண்
டெண்ணறிய ஜீவ ராகி
எப்போது முத்தொழி நடாத்து மதிகாரியா
யேகாந்த முத்தி வீடா
யரியிந்து தாரகையு மாகிமும் மூர்த்தியா
யனாதி ரட்சகனு மாகி
அறுசமய வேதோப நிட்தாக மாதார
வானந்த மோன மயமாய்த்
சரிவர எனைப்பாது காக்கவரு மண்ணலே
சரணமடி யேற்கருளு வீர்
தட்சணப் பனைசைவாழ் தட்சணா மூர்த்தியே
சச்சிதா னந்த குருவே. (10)

---

௮

## சுடலைமாடசாமி அழைப்பு.

காப்பு.

கண்பார்க்க நிற்குங் கனற்சுடலை மாடனுக்கு
வெண்பாப் பதிகம் விளம்பவே—தண்பொதியைக்
குள்ளமுனி யும்போற்றுங் குன்றைநகர்த் தோகையடிப்
பிள்ளையா ரைத்தரிசிப் பேன்.

அடும்பொற் பரியேறி யாயிரத்தெட் டண்டம்
நடுங்க நடத்திவரு நாதா—நெடுங்கனற்
கோடனே வாட்கைக் கொடூர நடச்சுடலை
மாடனே முன்னோடி வா. (1)

வடுகாட் டலர்சூடி வானத்தை முட்டிச்
சுடுகாட்டி னிற்குந் துரையே—கடுகுடித்தாள்
சீடனே ருற்றுத் திருநடமி டுஞ்சுடலை
மாடனே முன்னோடி வா. (2)

எங்கும் கிடுகிடென ஏரிட் டதிர்ந்தெழுந்து
குங்கும வாடை குமுகுமெனப்—பொங்குமிரு
பாடகம் பாடப் படபடென வேசுடலை
மாடனே முன்னோடி வா. (3)

இரஞ்சு மடியா ரிடுக்க ணொளியப்
பரஞ்சுடர் வீசிவரும் பாதா—நிரஞ்சனதென்
காடனே துட்டர் நடுங்க வடுஞ்சுடலை
மாடனே முன்னோடி வா. (4)

அட்டவரை பந்தா யடித்தேழ் கடல்குடித்து
மட்டாள தேசத் தனைவருங்கை—கட்டிநின்று
பாடவெரி போன்விழித்துப் பற்கடித்தா டுஞ்சுடலை
மாடாவி ரைந்தோடி வா. (5

அன்பர்தமைத் தூசித் தபசாரஞ் செய்வோரின்
முன்பு கனைத்து முடிபிடித்து—மென்பொடியக்
கோடா லிடித்துக் குடற்பிடுங்கி மாலையிடு
மாடாவி ரைந்தோடி வா. (6)

பத்த ரகநோவப் பண்ணுவார் கண் டெறிக்க
அத்தம் பிடித்திழுத்தா வாவென்று—கத்திகொண்டு
பாடாப் படுத்திப் பழிசெய்தி டுஞ்சுடலை
மாடாவி ரைந்தோடி வா. (7)

மெச்சடியார்க் கின்னு விளைப்போ ருடல்கிழித்துப்
பச்சிரத் தங்குடிக்கும் பானுவே—இச்சையுடன்
பாடா திருப்பினுமென் பக்கலின் றேசுடலை
மாடாவி ரைந்தோடி வா. (8)

பில்லி வினையேவல் பேய்பூத வேதாளஞ்
சல்லிய நோய்க டவிடுபடப் பல்லிடர்தீர்த்
தேடா ரடிமலரீந் தீடேற்ற வேசுடலை
மாடாவி ரைந்தோடி வா. (9)

அல்லலெல்லாம் போக்கி அறிவு மயமாக்கி
எல்லாப் பவுசு மினிதருள—மல்லாடிக்
கோடானு கோடி குறடுதிக்கு நற்சுடலை
மாடா சரணமிவண் வா. (10)

தேவகோட் டைக்கண் டிருந்திறைவை சேரியில்வாழ்
மூவர்கோட் டைக்காவன் முண்டகா—பூவி
னடலைவிட நித்தம் நடப்பன முன்பே
சுடலைமா டாவந்து சொல். (11)

ஆறு தாத்துதிதா டப்பா யிறைவைசெரி
மாறு வருட்சுடலை மாடனே—கூறிகத்து
முப்போதுங் காணு முறைபயிற்றி நோயணுகா
தெப்போதுங் காப்பா யென்னை

---

௨

## நரியங்குடி கருப்பணசாமி பதிகம்.

காப்பு.

புரியங் குடிக்கருகார் பூம்பொழில்சூழ் நல்ல
நரியங் குடிக்கருப்ப னுக்—குரியதமிழ்ப்
பாமாலை சாற்றப் பணிவாங் கயமுகத்துச்
சீமானை வேண்டித் தினம்.

கலிவிருத்தம்

பூவி லாரண புண்ணியர் கண்முனே
கூவி யாடிக் குலுங்குஞ் சடாதரா
காவி யாமலர்க் காற்புனை யாமெனைச்
சேவி வாவெனச் செப்புங் கருப்பனே (1)

கரும்பு நேர்மொழிக் கன்னியர் தன்னையே
விரும்பி வாடி மெலிந்தனை வந்தியா
திரும்பு நோக மாய்கையுக் காதென்முன்
றிரும்பு வாய்நரி யங்குடித் தெய்வமே (2)

தெய்வ மேதொழுஞ் சேய்செய்குற் றம்பொறு
தைவ ரேடனை யாட்டுவ தாகுமா
செய்கு லாவுந் திருசங்க மெங்குமே
வைகு நன்னரி யங்குடி வாசனே. (3)

வாச மாலைம ணக்கும் புயப்பிர
காச வீரகண் டாமணி யாடவே
மூசு மூசென்று பேசு நரியங்கு
டீச நேச எழுந்தரு ளீவையே. (4)

ஈகை யென்ப திறக்கும் வரைக்குமிற்
கூகை மக்களைக் கூடிக்கொண் டாடிவீ
ணாகிடா தெனை யாள்வதுன் பாரமே
நாகை விசும் நரியங் குடியனே (5)

குடிகள் வாழுங் கொழும்பொழி லன்னமென்
றுடியி டைச்சியர் தோன்றலி லங்கவே
மிடிக ருள்பட வேண்டி விரும்புன்பொன்
னடிகள் போற்றி யருள்கருப் பையனே. (6)

ஐமுகத் திறை யங்கயற் கண்ணுமா
மெய் முகத்தருள் வீசமுன் னுடுவாய்
உய்பு மாறொன் றுரைத்தரு டீவினை
நைய நன்னரி யங்குடி நாதனே. (7)

நாதனே நினை நம்பின னேழையேன்
மீதி லித்தனை வீம்பிடி னென்செய்வேன்
பூத பேயும்வாய் பொத்தி நடுங்கருட்
சாது வான கருப்பண சாமியே. (8)

சாமிநீ யெனக் குன்னடி யானுயான்
பூமி மீதிலிப் போதுவந் தோதுக
நேமி யோர்பணி நீரன வீரனே
காம னேர்மெய்க் கருப்பண சாமியே. (9)

சாம மேமமெப் போதுந்தர்க் காத்திசை
சேம மீயும் பொருப்புனைச் சேர்ந்ததே
காமர் வீசுங் கருப்பண நின்பத்துப்
பாமன னஞ்செய் பத்தர்கள் வாழியே. (10)

---

௨

## நரியங்குடி கருப்பணசாமி அகவல்

சீரா ரறிஞோர் தினந்தினம் போற்று
மாரூ தாரத் தருட்பெருங் கேள்வி
சாதி யந்தமி லானந்த வீட்டு
ஜோதி வடிவா யொளிர்மணி விளக்கு
மட்டாங்க யோக மருண்மா னோர்வந்
திட்ட வடியார்க் கிருநிலத் தில்லா
ஆச்சரி யங்காட் டரசே மலர்ந்த
பூச்சரி பாதா புயபல வீரா
வைவாள் கதையு மலர்க்கரத் தேந்தி
மைவாழ் சடையை மலைநேர் விரித்து
மல்லிகை முல்லை மருகுமந் தாரை
அல்லி யாளி யரவிந்த மேய்ந்த
தண்டொடை சூடித் தமனிய மார்பிற்
றண்டிரு வடியிற் றண்டைகள் புலம்ப
நெற்றிச் சுட்டி நிலவாய் விளங்க
மற்றிர வக்கிர தந்தம் வயங்க
சங்கு துந்துமி தம்புரு கொம்பு
வெங்கு முளங்க வேரிட் டெழுந்து
நாற்கோ மாதர் நடித்திசை பாட
பாற்கிரி போனற் படைப்புகள் காண
சிங்கார மாகத் திருநட மாடு
எங்கட் கரசே இரஞ்சின னீண்டுவந்
தானுக நின்றண் ணருண்மழை பெய்க
வேளுகந் தேசு மெய்திக ழடியார்

யாவரும் புகழ யாதுடன் வருவாய்
பாவ மனந்தம் பண்ணினே னெனினும்
நம்பின தாலோர் நாழிகைக் குள்ளே
வம்புசெய் யாது வந்தரு ளுகவே
தேன்பாய் பழனந் திகழ்வெண் புரியை
கான்பா லன்னங் கனிந்து முட்டையென்
றெண்ணி யிறகா லிருக்கும் வளங்க
டண்ணளி தருமந் தழைக்குங் கருங்குளத்
தென்பா னரியங் குடிவாழ்
அன்பார் கருப்பண வடைக்கல முனக்கே.

---

௨

## சோமசுந்தரேஸ்வரர் மீது கீர்த்தனை

அம்பிகா உன்மகன் என்ற மெட்டு.

### பல்லவி

சங்கரா சம்பு நம்பினேன்
இங்கு வாரும் விரும்பினேன் (சங்)

### அநுபல்லவி.

(1) கங்கை சூடுஞ் சடையா
காள கண்டமால் விடையா
திங்கள் மான் மழுவுடையாய்
தீதிலாத வேத மோது மோம் (சங்)

(2) நடன விளையாட் டுக்காரா
ஞான ஜனக் கூட்டக்காரா
அடர் கடம்பத் தோட்டக்காரா
ஆட்சி காட்சி மோட்ச தீட்சைசெய் (சங்)

(3) என் னிலைமை தெரியாதா
ஏழைமே லின்னு வாதா
அன்னை மீனாட்சி நாதா
அகமுகதரி சனவிக சிதனே (சங்)

(4) முத்தர் புகழ் முத்தமிழும்
முளங்கு மருட்டேனு மிழும்
நித்தர் குன்றுக்குடி மகிழும்
நிதியனுங்கண பதிசதா வணங்கும் (சங்)

---

## சுப்பிரமணியர் மீது கீர்த்தனை.

### கடம்பகந்தன் என்ற மெட்டு

(1) குறுமுனி சங்கங் குவலய மெங்குங்
கொண்டாடும் பாடல் பெற்ற
குன்றுக்குடிக் குமரனே—குஞ்சரி குறமகள் சேர்
குன்றுக்குடிக் குமரனே —தங்கக்
குடந்தனை யிடர்ந்துவம் பிடுந்தன மடந்தையர்
வடந்துகில் கிடந்திட நடந்துபின் றொடர்ந்திடுங்
கோபால கிருஷ்ணன் மருகா—ஓம் சரஹணபவனே
கொங்காருங் கடம்பவேல் முருகா.

(2) கொண்ட லுறங்குந் தென்றல் மணங் கமழ்
குகனேவுன் சன்னிதி வளருங்
கோபுரத்தீ பஸ்தம்பமே—சதகோடி சூரியன்
குலவிடுந் தங்கக் கும்பமே—ஊழின்
குரும்பற விரும்புர ரரும்புகழ் தரும்பார்
பெரும்பதி வரம்பெறத் திருப்பெனப் பிறங்கிடுங்
கோயிலிற் சாயுட்ச்ய மோட்சம்
கொடுத்தி டத்துதித் தடுத்தேன்
கொடுப்பா யுன்றிட் சையாங் கடாட்சம்

(3) அண்டடியா ரொடுசண் டைசெய்வோர் குடி
யடியோ டறுத்தனல் வாட்டும்
ஆறுமுகக் கடவுளே அரசகமயிலேறும்
ஆறுமுகக் கடவுளே—அண்டர்
அகந்தொழு சுகந்தா நினைந்தசு ரரைம்பொறி
சிதைந்தலே புதைந்திட விரைந்துதைத் தெறிந்திடும்
அருளாள னேலா வண்யனே
அன்பன் கணபதி தொழும்
அற்புதச் சுப்ர மண்யனே.

---

## ஸ்ரீ ஞம்பிகைமீது

கடம்பகந்தன் என்ற மெட்டு.

(1) மலர்ந்த ரோஜா மல்லிகைமுல்லை மாணிக்க மாலைபுனைந்த
மதுரை மீனுட்சி யம்மையே மகான்கள் போற்றும்
மதுரை மீனுட்சி யம்மையே—ஒரு
வாரணங் கருது வாரணங் கொடிரு
வாரணங் குமிரு வாரணங் குமிழு
மாயாவ தாரன் றங்கையே மலையத் வசனீன்ற
மரகதா கார மங்கையே.

(2) பலவிதவச்ர கிரீடமிலங்கப் பார்ப்பாரப் பெண்போல்வரும்
பத்தினி வுத்தமி நீயே பரமேஸ்வரர் நேசப்
பார்பதி யம்பிகைத் தாயே—நித்தம்
பாவபுண்ய மறுசேவை பண்ணுபவர்
நாவினுண்ணமுது பாவ நண்ணியருள்
படைக்குஞ் சித்தாந்தச் சைவமே—பரிபூரண மோட்சா
பரோட்ச வேதாந்தத் தெய்வமே.

(3) சலித்து நெஞ்சொடு சஞ்சல மிஞ்சிய சம்சாரசாகரத்தைத்
தஞ்சமா யெண்ணி யெப்போதுஞ் சம்பாதித்து மாதர்

தனைமருவிப் பெற்றசுகம் போதும் —இனித்
தாமன்யப் படவிடா துண்மைக் கடவு
ளாமுனைக்ப ஜீவ காருண்யத்தி னொடு
தனியா யோர் வனத்தினிற் சென்று நான்றவசு முடிக்க
தற்காத் தருள்வாய் நீ முன்னின்று.

(4) கலகல டடடண டண்ட டண்டவெனக் கண்டாமணி யடிக்கக்
கண்டேன் சூடதீ பார்த்தனை களிந்தானந்தங்கொண்டு
விண்டே னனேக கீர்த்தனை—முத்தர்
காணு மிந்லைதிரு வாணிமந்ர நவ
கோண யந்ரமிசை பேணுசந்ர முக
கருணாகர வருணாசலமானே —குன்றக்குடி வாழும்
கணபதியைக் காப்பவனீ தானே.

தெய்வத்துதித் திரட்டு முற்றிற்று.





யூநியன் சென்ற்றல் பிரஸ், வடக்குரதவீதி, திருநெல்வேலி.